15-4

தாயுமானவர் இயற்றிய

# எங்கும் நிறைகின்ற பொருள்




ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்
விரிவுரையுடன்

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை - 639 115 எலமனூர் ஸ்டேஷன்
திருச்சி ஜில்லா
1978

*தாயுமானவர் இயற்றிய*

# எங்கும் நிறைகின்ற பொருள்

***விரிவுரையுடன்***

அவனன்றி யோரணுவும் அசையாதெ னும்பெரிய
ஆப்தர்மொழி யொன்றுகண்டால்
அறிவாவ தேதுசில அறியாமை ஏதிவை
அறிந்தார்கள் அறியார்களார்
மௌனமொ டிருந்ததார் என்போ லுடம்பெலாம்
வாயாய்ப் பிதற்றுமவரார்
மனதெனவும் ஒருமாயை எங்கே இருந்துவரும்
வன்மையொ டிரக்கமெங்கே
புவனம் படைப்பதென் கர்த்தவிய மெவ்விடம்
பூதபே தங்களெவிடம்
பொய்மெயிதம் அகிதமேல் வருநன்மை தீமையொடு
பொறைபொரு மையுமெவ்விடம்
எவர்சிறிய ரெவர்பெரிய ரெவருறவ ரெவர்பகைஞர்
யாதுமுனை யன்றியுண்டோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

*உலகிலுள்ள நாடுகளையெல்லாம் நாம் நேரில் சென்று பார்த்ததில்லை. அவையாவையும் நேரில் பார்க்க அவகாசமும் இதர வசதிகளும் இல்லை. அப்படியிருந்தும் அந்நாடுகளைப் பற்றிய உண்மைகள் பலவற்றை நாம் அறிந்துகொள்ள முடியும். நேரே அந்நாடுகளைச் சென்று பார்த்தவர்களிடமிருந்து எத்தனையோ விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து*

கொள்ளலாம். இனி அதில் மற்ருெரு நிபந்தனை உண்டு. பிறநாடு சென்று வந்தவர்கள் ஆங்கு உள்ளவைகளைச் சரியாகப் பார்த்து அறிந்துகொள்ளக் கூடியவர்களாக இருக்க வேண்டும். தாங்கள் பார்த்தவைகளைச் சரியாக எடுத்து விளக்கக்கூடியவர்களாக இருக்கவேண்டும். பிதற்றுதல், பொய்பேசுதல் போன்ற ஒழுக்கக் குறைபாடுகள் அன்னவர்களிடத்து இருக்கலாகாது. கேட்டுத் தெரிந்துகொள்ள விரும்புகின்றவர்களுக்குத் தாங்கள் கண்டறிந்துகொண்டதை உள்ளபடி எடுத்து விளக்கிச் சொல்லுதலில் ஆர்வம் மிகப்படைத்தவர்களாக இருக்க வேண்டும். தாங்கள் பார்த்த பிறநாடுகளைப்பற்றி அத்தகைய நல்லவர்கள் பகர்வதையெல்லாம் நாம் ஏற்றுக்கொள்ளுவது முறை. வேறு நாடுகளைப்பற்றிச் சரியாக அறிந்துகொள்ளுவதற்கு அதைத் தவிர வேறு வழி நமக்கு இல்லை.

இக்கோட்பாடு கடவுள் தத்துவத்துக்கும் உரியதாகிறது. ஈசனை நாம் நேரில் கண்டறிந்தவர்கள் அல்லர். காணும் திறமையும் பரிபாகமும் நமக்கு இன்னும் வந்து வாய்க்கவில்லை. ஆனால் பரம்பொருளை நேரில் சாக்ஷாத்கரித்துள்ள பெருமக்கள் உலகில் இருந்திருக்கின்றனர். வெவ்வேறு காலங்களில் அவர்கள் தோன்றி வரவும் செய்கின்றனர். அவர்கள் எல்லோரும் சீலத்திலும் நல்லொழுக்கத்திலும் தலை சிறந்தவர்கள். பாரமார்த்திகப் பெருவாழ்வை அவர்களிடத்தில் காண்கிறோம். மக்களிடத்து அவர்கள் பேரன்பு மிக வைத்திருக்கின்றனர். மக்களை நல்வழியில் செல்லுதற்கு ஊக்கம் ஊட்டுதலிலும் அவர்கள் கருத்து மிக உடையவர்களாக இருக்கின்றனர். அத்தகைய பெருமக்கள் கடவுளைப்பற்றிப் பகர்வதில் ஒற்றுமை மிக இருக்கிறது. ஒருவர் கூற்றுக்கும் மற்ருெருவர் கூற்றுக்கும் முரண்பாடு

எதும் இல்லை. பொருளை எடுத்து விளக்குதலில் ஒவ்வொரு வரும் தத்தமக்குற்ற முறையைக் கையாண்டிருக்கின்றனர். மெய்ப்பொருள் அறிந்தபெருமக்கள் கடவுளைப்பற்றிப் பகர் வதை ஆப்தமொழி என்கிறோம். ஆப்தன் என்பதன் பொருள் பரம்பொருளை அடையப் பெற்றவனும். பரம்பொருளை அனு பூதியில் அடைந்திருப்பவனே அப்பொருளைப்பற்றிப் பேச அருகதையுடையவன். நமக்கு வாய்த்துள்ள உபநிஷதங் களெல்லாம் ஆப்த வாக்கியங்கள் என்று கூறப்படுகின்றன. அந்த ஆப்த வாக்கியங்களைப் பிரமாணமாக வைத்துக் கொண்டே பரம்பொருளைப்பற்றி நாம் யூகித்து அறிய வேண் டியதாய் இருக்கிறது. பரம்பொருள் எத்தகையவர் என் பதைப்பற்றி அவர்கள் எல்லோரும் கிட்டத்தட்ட ஒரேவிதத் தில் இயம்பியிருக்கின்றனர். அவர்கள் கூற்றை அறிந்து கொள்ளுதற்கு நாம் அனுபவத்தில் கண்டுள்ள மற்றொன்றை உபமானமாக வைத்துக்கொண்டு பரம்பொருளை யூகித்து அறிந்துகொள்ள முயலுவோம்.

பரம்பொருளை நிர்க்குணப்பிரம்மம் என்றும் சகுணப் பிரம்மம் என்றும் ஆன்றோர்கள் பகர்ந்திருக்கின்றனர். நிர்க் குணப்பிரம்மத்திடம் குணம் குறி ஒன்றுமில்லை. கிருத்தியம் எதும் ஆங்கு நிகழ்வதில்லை. சகுணப்பிரம்மமோ விபூதிகள் பலவற்றை உடைத்திருக்கின்றார். உலகும் உயிர்கள் அனைத் தும் சகுணப்பிரம்மத்திடமிருந்து வந்துள்ளன. சகுணப் பிரம்மத்தை ஈசுவரன் என்றும் அழைக்கிறோம். பஞ்சகிருத் தியங்கள் அவரிடம் நிகழ்ந்துகொண்டிருக்கின்றன. ஆயி னும் சகுணப்பிரம்மமும் நிர்க்குணப்பிரம்மமும் இரண்டு வஸ் துக்கள் அல்ல. ஒரே பொருள் இவ்இரு நிலைகளிலும் இருக்கிறது. இதற்கு சான்று ஒன்று எடுத்துக்கொள் வோம். சூரிய வெளிச்சம் சூரியனிடமிருந்து வந்துகொண்

டிருக்கிறது. அவ்வெளிச்சம் ஏதேனும் ஒரு திரையின்மீது படாவிட்டால் நாம் அதைக் காண முடியாது. நீர், நிலம் போன்ற வஸ்துவில் படும்பொழுதே வெளிச்சம் நமக்குக் கட்புலனுகிறது. முப்பட்டைக் கண்ணுடி ஒன்றின் வாயிலாக அவ்வெளிச்சத்தைச் செலுத்தினுல் அது ஏழு நிறங்களாகப் பிரிகிறது. ஏழுநிறங்களாயிருப்பது போன்றது சகுணப் பிரம்மம். நிறமற்று கட்புலனுகாது இருக்கும் வெளிச்சம் போன்றது நிர்க்குணப்பிரம்மம். இதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொண்டால் இப்பொழுது நாம் ஆராய்கின்ற பாட லின் உட்கருத்து நமக்கு நன்கு விளங்கும்.

ஈசுவரனை நேரே சாக்ஷாத்கரித்திருப்பவர்கள் அவரைப் பற்றிய உண்மையொன்றை எடுத்துரைக்கின்றனர். பிரபஞ் சமாகத் தென்படுவது உண்மையில் ஈசனே. பிரபஞ்சத்தி லுள்ள உயிர்கள் அனைத்தும் ஈசுவர சொரூபத்தில் அடங்கிக் கிடக்கின்றன. ஈண்டு நிகழ்கிற நிகழ்ச்சிகளெல்லாம் ஈசன் செயல். ஈண்டுத் தென்படுகின்ற சராசரங்கள் அனைத்தும் ஈசனுடைய தோற்றம். இந்த அனுபவம் அப்பெருமக்களுக்கு வாய்த்திருக்கிறது. ஆதலால் அதற்குற்ற ஞானக்கண் கொண்டு அவர்கள் அனைத்தையும் காண்கின்றனர். ஆனுல் நமக்குற்ற ஊனக்கண்கொண்டு நமக்குத் தென்படுபவை களை நாம் கண்டு வருகிறோம். நாம் காண்கிற காட்சிக்கு வியாவகாரிக ஸத் என்று பெயர். ஞானிகள் காண்கிற காட்சிக்கு பாரமார்த்திக ஸத் என்று பெயர். இந்த இரண்டு காட்சிகளும் சேர்ந்து ஏககாலத்தில் யாருக்குமே வாய்ப்ப தில்லை. பாரமார்த்திகக் காட்சி இருக்கிறபொழுது வியாவ காரிக காட்சி இல்லை. இதற்கு உபமானம் ஒன்று எடுத்துக் கொள்ளுவோம். மயக்கத்தால் ஏகதேச இருளில் கயிறு பாம்பாகத் தென்படுகிறது. பாம்பு என்னும் காட்சி கருத்தில்

இருக்கிறபொழுது கயிறு என்னும் காட்சி கருத்தில் இல்லை. மற்று, கயிறு என்னும் மெய்க்காட்சி காண்போனுக்கு பாம்பு என்னும் பொய்க்காட்சி இல்லை. இக்கோட்பாட்டையும் நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நமக்குப் புலனாகின்ற பிரபஞ்சத்தைப்பற்றி ஆன்றோர்கள் பகர்ந்திருப்பதை அவனன்றி ஓர் அணுவும் அசையாது எனும் பெரிய ஆப்தர்மொழி ஒன்று கண்டால் எனத் தாயுமானவர் இயம்புகின்றார். ஈண்டு இரண்டுவித அனுபவங்கள் பக்கம் பக்கம் வைத்து சீர்தூக்கப்படுகின்றன. நமது வியாவகார அனுபவத்தில் அவரவர் செயலுக்கு அவரவர் பொறுப்பாளியாகின்றோம். ஞானியின் காட்சியில் செயலனைத்துக்கும் கர்த்தாவாயிருப்பவர் ஈசன். நமது கை கால்களுக்குச் செயலில் தனிச் சுதந்திரம் கிடையாது. நமது செயல் கை கால்கள் மூலம் நிகழ்கின்றது. அதேவிதத்தில் ஈசனுடைய செயல் அவனுடைய விராட் சொரூபத்தில் உறுப்புக்களாயிருக்கின்ற சராசரங்கள் வாயிலாகவும் சேதன அசேதனப் பொருள்கள் வாயிலாகவும் நிகழ்கிறது.

மானுட அமைப்பில் உறுப்புக்கள் பல இருக்கின்றன. ஒவ்வோர் உறுப்பும் ஒரு தனிச் செயலுக்கு அமைந்துள்ளது. பார்க்கும் திறமை கண்ணுக்கு அமைந்திருக்கிறது. கண்ணில் படுகிற விதத்தில் குச்சி ஒன்றை அசைத்தால் அதை அறிந்து கண்ணிமை மூடிக்கொள்கிறது; கண் வேறொரு பக்கம் விலகிக் கொள்கிறது. குச்சியானது தன்னை நோக்கி வருவதைப் பற்றிய அறிவு கண்ணுக்கு இருக்கிறது. ஆனால் அக்குச்சி கண்ணைநோக்கி வாராது கையை நோக்கி வருமாகில் அது வருவதை கை அறிந்து கொள்ளாது. பார்த்தறியும் திறமை கண்ணுக்கு இருக்கிறது; ஆனால் கைக்கு இல்லை. அறிவாய் கண் இருக்கிறது; கை இல்லை. ஆனால்

உடல் சொரூபம் முழுதையும் கணக்கில் எடுத்துக்கொள்ளும் பொழுது அதனதன் நிலையில் அது அது பெரியதே. ஒன்றை உயர்ந்தது என்றும் மற்றதைத் தாழ்ந்தது என்றும் பாகு படுத்தலாகாது. பிரபஞ்சம் முழுதும் சர்வேசுவரனுடைய திருமேனி. அத்திருமேனியில் அறிவு சொரூபமாய் இருக்கிற பகுதிகள் உண்டு. அறிவற்றவைகளாய்த் தென்படுகிற பகுதிகளும் உண்டு. ஆனல் அனைத்தையும் தொகுத்து சமஷ்டிமயமாயிருக்கும் சர்வேசுவரனைக் காணுமிடத்து நமது காட்சிக்கு அறிவாவதேது சில அறியாமை ஏது எனத் தாயுமானவர் பகர்கிறுர்.

விழித்திருக்கும் மனிதன் புறவுலகத்தை அறிந்தவனு யிருக்கிறுன். அயர்ந்து உறங்குகிற மனிதன் புறவுலகத்தை அறியாதவனுய் இருக்கிறுன். ஆனல் விழிப்பு உறக்கம் ஆகிய அவஸ்தைகளை முன்னிட்டு ஒரு மனிதனை அறிவுடைய வனுகவும் மற்றொரு மனிதனை அறிவற்றவனுகவும் நாம் பொருள் படுத்தலாகாது. சர்வேசுவரனுடைய விசுவரூபத் தில் உயிர்கள் அனைத்தும் அடங்கியிருக்கின்றன. அவை களுள் சில உயிர்கள் விழித்திருக்கின்றன; வேறு சில உயிர் கள் உறங்கிக்கொண்டிருக்கின்றன. விழித்திருக்கும் உயிர் கள் ஜீவபோதம் பெற்றவர்களாய் புறவுலகை அறிகின்றன. உறங்கிக்கொண்டிருக்கும் உயிர்கள் ஜீவபோதம் குன்றியவர் களாய் புறத்தில் எதையும் அறியாதவர்களாயிருக்கிறுர்கள். ஆயினும் அவ்வுயிர்கள் அனைத்தும் ஈசனுடைய திருமேனி யில் தகுந்த இடம் பெற்றவர்களாயிருக்கிறுர்கள். இக் கருத்தை இதை அறிந்தார்கள் யார்? அறியார்கள் யார்? என அண்ணல் தெரிவிக்கிறுர்.

கடல் ஒன்றின் மேற்பரப்பில் அலைகள் உருவெடுத்து உருண்டோடி கர்ஜித்துக்கொண்டிருக்கின்றன. கடலின்

அடிமட்டம் அலையற்று அமைதியுற்றிருக்கிறது. ஆங்கு ஓசை ஒன்றும் உண்டாவதில்லை. கடல் முழுதையும் ஆகாய விமானத்தினின்று பார்க்கிறபொழுது ஓசையை உண்டு பண்ணுகிற பகுதி, அதை உண்டுபண்ணாத பகுதி என நாம் பிரித்தெடுப்பதில்லை. ஈசனுடைய விராட் சொரூபத்தில் ஓசை மயமாயிருக்கிற பகுதி உண்டு. ஓசை, ஒலி எல்லாம் ஒடுங்கிய பகுதியும் உண்டு. எல்லாப்பகுதிகளும் ஈசன் மயமே. இக்கருத்தை மௌனமொடு இருந்தது ஆர்? என்போல் உடம்பெலாம் வாயாய்ப் பிதற்றும் அவர் யார்? எனத் தாயுமானவர் கேட்கிறார்.

நமது ஜீவ அமைப்பில் விழிப்பு நிலை, கனவு நிலை என இரண்டுபகுதிகள் உண்டு. இந்த இரண்டு பகுதிகளில் மனது செயல் புரிகிறது. கனவற்ற உறக்கத்தில் மனது செயலற்று இருக்கிறது. மனது செயல் புரிகின்றபொழுது எத்தனை யெத்தனையோ வியவகாரங்களை அது உண்டு பண்ணுகிறது. நனவில் பண்ணிய வியவகாரத்தைக் கனவு நிலை அடித்துத் தள்ளுகிறது. கனவில் மனது உண்டுபண்ணிக்கொண்ட அனைத்தையும் நனவு நிலை ஒதுக்கித் தள்ளுகிறது. அப்படி அவையிரண்டும் ஒன்றுக்கொன்று முரண்பட்டிருப்பதால் அவை மாயாகாரியங்கள் ஆகின்றன. அவை ஒன்றும் நிலைத்திருப்பதில்லை. ஆனால் ஜாக்ரதா அவஸ்தை, சொப்பனாவஸ்தை ஆகியவைகளைக் கடந்ததாகிறது ஈசனுடைய சாந்நித்தியம். அந்த சாந்நித்தியத்துக்குப் போகும் பொழுது நாம் ஈண்டு படைத்துள்ள கீழ்த்தரமான மனதுமில்லை; அது உண்டு பண்ணிக்கொள்கிற மாயா காரியங்களும் இல்லை. இக்கோட்பாட்டை மனது எனவும் ஒரு மாயை எங்கேயிருந்து வரும்? என்று அவர் கேட்கிறார்.

நம்மை நாம் ஜீவர்களாகக் கருதிக்கொள்கிறபொழுது உறவாடுதலில் வேற்றுமை பாராட்டுகின்றோம். நமக்குப் பிடிக்காத உயிர்களிடத்துப் பராமுகமாயிருக்கிறோம்; அல்லது வல்லியல்பு படைத்தவர்களாயிருக்கிறோம். நமக்கு ஒத்துக்கொள்ளும் உயிர்களிடத்து அனுதாபங்காட்டுகிறோம்; அவர்களுக்காகவென்று மனமிளகி எதையும் செய்ய ஆயத்தமாயிருக்கிறோம். ஆனால் சுஷுப்தி அவஸ்தையில் பக்கம் பக்கம் படுத்திருக்கிற மனதுக்கு ஒவ்வாதவனிடம் வல்லியல்பைக் காட்டுவதும் மனதுக்கு ஒத்திருப்பவனிடம் மெல்லியல்பைக் காட்டுவதும் அகன்றுபோய்விடுகின்றன. அதேவிதத்தில் ஈசனுடைய சாந்நித்தியத்தை அனுபவிக்கும்பொழுது இந்த ஜீவ வேற்றுமை அறவே அகன்று பட்டுப் போகிறது. கல் நெஞ்சம் படைத்திருக்கவோ, இளகிய உள்ளம் படைத்திருக்கவோ ஆங்கு அவகாசம் இல்லை. இக்கோட்பாட்டை வன்மையொடு இரக்கமெங்கே? என்று அண்ணல் கேட்கிறார்.

சிருஷ்டி கர்த்தாவாகிய பிரம்மதேவனுக்கும் நமக்கும் இடையில் ஒற்றுமை ஒன்று உண்டு. படைத்தல் செயலை அவர் பெருவாரியாகச் செய்கிறார். அதே செயலைச் சிறிய அளவில் நாம் செய்துவருகிறோம். சிருஷ்டிக் கிருத்தியம் கால தேச வர்த்தமான மயமாய் இருக்கிறது. நம்முடைய மனதைக்கொண்டு கால தேச வர்த்தமானத்தை நமக்கு நாமே பண்ணிக்கொள்கின்றோம். அப்படி நாம் சிருஷ்டித்துள்ள கால தேச வர்த்தமானத்துக்கேற்ற புவனம் நமது காட்சியில் இருக்கிறது. ஜீவர்களின் தொகுதியாகிய பிரம்மதேவன் சிருஷ்டித்த புவனம் எல்லாருடைய காட்சியிலும் இருக்கிறது. பிரம்மதேவனுடைய மனது ஒடுங்குகிறபொழுது அகிலாண்டத்துக்கும் பிரளயம். நமது மனது

ஒடுங்குகிறபொழுது நாம் படைத்துள்ள புவனத்துக்குப் பிரளயம். இப்படி இவையிரண்டும் ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன. ஆனல் பரமேசுவரனிடத்து பிரம்மதேவன் தனது ஜீவ வியக்தியை ஒடுக்கிவிட்டால் அவன் படைத்த புவனம் அடிபட்டுப்போய் விடுகிறது. ஜீவர்களாகிய நாம் நமது ஜீவபோதத்தை பரமேசுவரனிடம் ஒடுக்கிவிடும் பொழுது நாம் படைத்துள்ள புவனம் மறைந்து பட்டுப் போகிறது. இக்கோட்பாட்டை **புவனம் படைப்பது என்?** என்று தாயுமானவர் கேட்கிருர்.

ஒரேமின்சக்தி ஒரு கருவியில் ஒலியாகப் பரிணமிக்கிறது; இன்னெரு கருவியில் ஒளியாகப் பரிணமிக்கிறது; மூன்ரும் கருவி ஒன்றில் இயக்கமாகப் பரிணமிக்கிறது; நான்காம் கருவியில் வெப்பமாக உருவெடுக்கிறது; ஐந்தாம் கருவியில் தணுப்பாகத் தன்னைத் தோற்றுவித்துக்கொள்கிறது. இத்தனைவிதத் தோற்றங்களும் மின்சக்தியின் செயல்களேயொழிய அச்செயல்களுக்கு அந்தந்தக் கருவிகள் கர்த்தாக்கள் ஆகமாட்டா. ஜீவர்களாகிய நாம் நம் செயல்களுக்கெல்லாம் நம்மையே கர்த்தாவாக எண்ணி வருகிறோம். கடலில் உள்ள ஒவ்வொரு அலையும் தன் செயலுக்குத் தான் கர்த்தா என்று எண்ணிக்கொள்கிறது. ஆனல் கடலுக்கு அன்னியமாக அலைகளுக்கு வியக்தியுமில்லை; செயலுமில்லை. சர்வேசுவரனுக்கு அன்னியமாக நமக்கு வியக்தியுமில்லை; கர்த்தவ்யமுமில்லை. இக்கோட்பாட்டை **கர்த்தவ்யம் எவ்விடம்?** என்று அண்ணல் கேட்கிருர்.

ஒரே சூரிய வெளிச்சம் ஏழு நிறங்களாகப் பிரிகிறது. அந்த ஏழு நிறங்களுள் பச்சை சிவப்பினின்று பேதப்பட்டிருக்கிறது. பின்பு ஏழு நிறங்களும் ஒன்றிக்கு மிடத்தில் அவைகள் அபேத நிலையை அடைந்துவிடுகின்றன. பஞ்ச-

பூதங்களால் பிரபஞ்சம் முழுதும் அமைந்திருக்கிறது. மண் என்னும் பூதம் நீர் என்னும் பூதத்தினின்று பேதப்பட்டிருக்கிறது. மண்ணில் வசிக்கும் உயிர் நீரில் வசிக்க முடியாது. நீரும் நெருப்பும் பேதப்பட்டிருக்கின்றன. நீரைக்கொண்டு நெருப்பை அணைக்கலாம். நெருப்பின் வெப்பம் மிகைபட்டு வருமிடத்து நீர் இருக்குமிடம் தெரியாது அதை ஆவியாக மாற்றிவிடுகிறது. ஆனல் இந்த ஐந்து பூதங்களும் ஒன்றில் ஒன்று ஒடுங்கி மூலநிலையை யெய்தும்பொழுது அவைகளுக்கிடையில் பேதமில்லை. இக்கோட்பாட்டை பூதபேதங்கள் எவ்விடம்? என்று அவர் கேட்கிருர்.

உலகிலே நிகழ்கின்ற எல்லாவிதமான செயல்களையும் மகாபாரதத்தில் அடங்கியுள்ள பாத்திரங்களில் காண்கிருேம். பொய்யும் பித்தலாட்டமுமே வடிவெடுத்துள்ளவர்கள் அந்த இதிகாசத்தில் இடம் பெறுகின்றனர். மெய்ம்மையினின்று இம்மியளவும் பிசகாதவர்களையும் ஆங்குக் காண்கிருேம். பிறர்க்கு ஹிதம் அல்லது நலத்தையே செய்து வருகிறவர்கள் இருக்கிருர்கள். அவர்களை எவ்வளவுதான் துன்புறுத்திலும் அவர்கள் தீங்குக்குப் பிரதி தீங்கு செய்ய மாட்டார்கள். இனி, அவர்களுக்கு நேர்மாருக அஹிதம் அல்லது தீங்கையே செய்கிறவர்கள் இருக்கிருர்கள். ஆபத்தினின்று தன்னைக் காப்பாற்றுகின்றவர்களையும் தேள் கொட்டும். ஏனென்ருல் அதன் இயல்பு அத்தகையது. அதே விதத்தில் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தீங்கையே செய்துகொண்டிருக்கின்றவர்கள் இருக்கின்றனர். வாழ்க்கையில் நன்மைக்கு எடுத்துக்காட்டானவர்கள் இருக்கின்றனர். தங்கள் வாழ்வனைத்தும் தீமை அல்லது கொடுமையே வடிவெடுத்தவர்கள் இருக்கிருர்கள். பிறர் அடைகின்ற முன்னேற்றத்தில் பொறையுடையவர்கள் இருக்கிருர்கள். பிறர்

முன்னேற்றம் அவர்களுக்குத் தங்களின் சொந்த முன்னேற்றத்திற்கு நிகர். ஆதலால் பிறர் முன்னேற்றத்தில் பெருமகிழ்ச்சியடைகின்றனர். அவர்களுக்கு நேர்மாருக பொருமைக்காரர்கள் இருக்கிருர்கள். உலகில் யாருடைய முன்னேற்றத்தையும் பார்த்துச் சகிக்க அவர்களுக்கு இயலாது. பிறர் ஆக்கத்தைப் பார்த்து அவர்களுடைய உள்ளம் எரிச்சலெடுத்துப் பொங்கிக்கொண்டே யிருக்கும். இயல்பிலும் ஒழுக்கத்திலும் இணக்கத்திலும் சிறுமையே வடிவெடுத்தவர்கள் இருக்கிருர்கள். அத்தகையவர்களை அல்பர் என்றும் தன்மையில் சிறியவர் என்றும் உலகம் ஒதுக்கி வைக்கிறது. இனி, அவர்களுக்கு நேர்மாருக பெரியவர் எனப் போற்றப்படுபவர்கள் உளர். இயல்பிலும் ஒழுக்கத்திலும் இணக்கத்திலும் அவர்கள் எப்பொழுதுமே பெருமை மிக வாய்க்கப்பெற்றவர்கள். பெருந்தன்மையே வடிவெடுத்திருப்பதால் அன்னவர்கள் பெரியவர் எனப் பாராட்டப்படுகின்றனர். காலமெல்லாம் ஒரு கூட்டத்தாரை உறவர் என்று நம்பியிருக்கலாம். காலவேறுபாட்டை முன்னிட்டோ சந்தர்ப்ப வேறுபாட்டை முன்னிட்டோ அவர்களுடைய உறவு ஒருநாளும் கலைந்துபோகாது. அதற்கு மாருக ஜன்ம சத்துருக்கள் எனப்படுபவர் இருக்கின்றனர். எக்காலத்திலும் எல்லா சந்தர்ப்பங்களிலும் அன்னவர் பகைஞர் ஆகின்றனர். இத்தனைவித வேறுபாடுகளை உடைத்திருப்பது உலகம். அந்தந்த வேறுபாட்டுக்கேற்ற பிரகாரம் வெவ்வேறு மக்களிடத்து வெவ்வேறுவிதமாக நடந்துகொள்ளுவது உலக நடைமுறை. மகாபாரதப் போர் நிகழ்தற்கு முன்பு அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் விசுவரூபத்தைக் காட்டியருளினர். அதைப் பார்த்தவுடன் அர்ஜுனன் உலகைப்பற்றிக் கொண்டிருந்த எண்ணத்தை அடியோடு மாற்றிக்கொண்

டான். அதிலிருந்து உண்மையொன்றை அவன் அறியலானுன். தனக்குக் கேடு செய்து வந்தவர்களெல்லாம் பகவானுடைய சொரூபத்தில் அடங்கியிருக்கக் கண்டான். தனது ஜென்ம சத்துருக்களெல்லாம் பகவானுக்குப் புறம்பானவர்கள் அல்லர் என்பதை அறிந்துகொண்டான். தன்னுடைய உற்ருர் உறவினரும் தானும் பிரபஞ்சம் அனைத்தும் பகவானுடைய சொரூபத்தில் அடங்கியிருப்பதைக் கண்டான். அதுமட்டுமல்ல, போர்புரிதல் என்னும் கொடிய செயலில் தான் இறங்குவது முறையோ என்று ஐயங்கொண்டிருந்தவனுக்கு அந்த ஐயம் அகன்று போயிற்று. தான் கருவியாய் இல்லாவிட்டாலும் பல உயிர்களை அவ்வேளையில் துடைத்து ஒடுக்குவது ஈசனுடைய பெருந்திட்டம் என்பதைக் கண்டுகொண்டான். தங்கள் செயல்களுக்கெல்லாம் தாங்களே கர்த்தாக்கள் என்று உயிர்வகைகள் எல்லாம் எண்ணிக் கொண்டிருக்கின்றன. ஆனல் அத்தனைவித உயிர்களைக் கொண்டு ஈசன் தமது பெருந்திட்டத்தைச் செய்து நிறைவேற்றுகிருர்என்பது அவனுக்கு விளங்கிற்று. உலகில் தென்படுகிற முரண்பாடுகள் உண்மையில் முரண்பாடுகள் அல்ல என்பது ஈசனுடைய காட்சியைக் காண்பவருக்கே விளங்குகிறது. பரமசிவனும் அவ்வுண்மையைத் தமது சொரூபத்தில் அடக்கிவைத்துக் காட்டிக் கொண்டிருக்கிருர். சர்ப்பத்துக்கும் சந்திரனுக்கும் எப்பொழுதுமே பகை என்பது உலக ஐதிகம். ஆனல் சிவனரது சொரூபத்தில் சந்திரனும் சர்ப்பமும் பக்கம் பக்கம் இடம் பெற்றிருக்கின்றன. தீயை அணைக்கவல்லது தண் புனல். ஆனல் சிவனரது ஜடா பாரத்திலிருந்து பொழிந்து கொண்டிருக்கின்ற கங்கை அவர் கையில் ஏந்தியிருக்கும் அனலை அணையாதிருக்கிறது. விலங்குகளுள் பெரியது யானை ; சிறியது எலி. யானை

வடிவினனாகிய பிள்ளையார் எலியை வாகனமாகக் கொண்டிருப்பதன்மூலம் ஈசுவரசொரூபத்தில் பெரியது சிறியது இல்லை என்பதைக் காட்டுகிறது. கொழுத்த காளையைப் பார்க்கிற சிங்கம் அதைக் கொன்று தின்ன ஆசைப்படுமேயொழிய அது வாழ்ந்திருக்கட்டும் என்று ஆசீர்வதிக்காது. ஆனால் சிவனாருடைய சந்நிதியில் அம்பிகையின்வாகனமாகிய சிங்கமும் அண்ணலின் வாகனமாகியகாளையும் பக்கம் பக்கம் வசித்திருக்கின்றன. பொறுமையோ, பகையோ, பயமோ ஆங்கு இல்லை. ஆற்றலில் சிறப்புற்று இளையவனாகிய குமரன் இருக்கிறான். அறிவில் பெரியவனாக மூத்தவனாகிய கணபதி இருக்கிறான். இவ்விருவருள் மேலோன் யார், கீழோன் யார் என்று நிர்ணயிக்க முடியாது. பெயரளவில் ஒருவன் பெரியவன்; மற்றவன் சிறியவன். உண்மையில் பெரியவர் சிறியவர் என்பது ஈசுவர சாந்நித்தியத்தில் இல்லை. ஈசனுடைய சொரூபத்தில் வேற்றுமைக்கு இடமில்லை; பாகுபாட்டுக்கு இடமில்லை; அனைத்தும் அவர் மயமாகி விடுகிறது. அர்ஜுனனுக்குக் கிடைத்த அத்தகைய விசுவ சொரூபக் காட்சி சிவனார் சொரூபத்திலேயே அடங்கியிருக்கிறது. ஆதலால் பொய் மெய் ஹிதம் அஹிதம்மேல் வரும் நன்மை தீமையொடு பொறை பொறுமையும் எவ்விடம்? எவர் சிறியர்? எவர் பெரியர்? எவர் உறவர்? எவர் பகைஞர்? யாதும் உனையன்றி உண்டோ? என்று தாயுமானவர் பகர்வது ஈசனைப்பற்றிய முடிவான உண்மையாம்.

உடலைப் பெற்று உடல் உணர்வோடு வாழ்ந்திருக்கிற நிலை இகம் எனப்படுகிறது. உடல் உணர்வைக் கடந்து ஆத்மபோதத்தில் திளைத்திருப்பது பரம் எனப்படுகிறது. இவ்விரண்டினுள் எந்த நிலையில் ஜீவன் இருந்தாலும் அவன்

பரமாத்மாவுக்குப் புறம்பாவதில்லை. பரமாத்மாவிடத்திருந்தே தனது வியக்தியை அவன் யாண்டும் பெறுகிறான். ஆதலால் அவர் இகபர மிரண்டினிலும் உயிர்க்கு உயிராய் இருக்கிறார் எனப்படுகிறார். இடமே அவரிடத்து ஒடுங்கி விடுவதால் அவர் எங்கும் நிறைபொருள் ஆகிறார். இக் கருத்துக்கள் அனைத்தும் அடங்கிய பாடல் இது.



# எங்கும் நிறைகின்ற பொருள் - 2

அன்னே யனேயெனுஞ் சிலசமயம் நின்னேயே
ஐயாஐயா என்னவே
அலறிடுஞ் சிலசமயம் அல்லாது பேய்போல
அலறியே யொன்றும்இலவாய்ப்
பின்னேதும் அறியாம லொன்றைவிட் டொன்றைப்
பிதற்றிடுஞ் சிலசமயமேல்
பேசரிய ஒளியென்றும் வெளியென்றும் நாதாதி
பிறவுமே நிலயமென்றுந்
தன்னே ரிலாததோ ரணுவென்றும் மூவிதத்
தன்மையாங் காலமென்றுஞ்
சாற்றிடுஞ் சிலசமயம் இவையாகி வேறதாய்ச்
சதாஞான ஆனந்தமாய்
என்னே யெனேகருணே விளையாட் டிருந்தவா(று)
எம்மனோர் புகலஎளிதோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக்குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

தத்துவ ஆராய்ச்சியில் திருக் என்றும் திருஸ்யம் என்றும் இரண்டு பாகுபாடுகள் இருக்கின்றன. திருக் என்னும் சொல் காண்போன் எனப் பொருள்படுகிறது. அத்தகைய காண்போனல் காணப்படுபவைகள் யாவும் திருஸ்யமாம். ஜீவாத்மன் காண்போனுக இருக்கிருன். இவ்வுலகம் ஜீவனுல் காணப்படு பொருளாக இருக்கிறது. ஆக திருக், திருஸ்யம் என்று சொல்லுமிடத்து காண்போனுகிய ஜீவனும் அவனுல் காணப்படுவதாயிருக்கின்ற உலகும் என இப்பதங்களுக்கு அர்த்தங்கள் வருகின்றன. இனி, அடுத்த

படியாக மற்ருெரு கோட்பாடு வருகிறது. திருக்கினிடத்து மாறுதல்கள் அமைவதற்கு ஏற்ப திருஸ்யமும் அவனுடைய காட்சிக்கு மாறியமைகிறது. அதற்கு நல்லதொரு சான்று சொல்லலாம். கிழவர்கள் அனைவரும் தாங்கள் இளைஞர் களாக இருந்தபொழுது உலகம் நன்ருக இருந்ததென்றும் அது இப்பொழுது கெட்டுப்போய் விட்டது என்றும் சொல் வார்கள். இப்பொழுது உயிர் வாழ்ந்திருக்கும் கிழவர்கள் உலகம் கெட்டுப்போய் விட்டது என்கின்றனர். ஐம்பது வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்திருந்த கிழவர்கள் உலகம் கெட்டுப்போய் விட்டது என்றனர். நூறு வருஷங்களுக்கு முன்பு வாழ்ந்திருந்தவர்களும் அப்படியே பகர்ந்தனர். அப் படியானல் நாள் ஏற ஏற உலகம் கெட்டு வருகிறதா என் பது கேள்வி. இல்லை, உலகம் எப்பொழுதும் இருந்தபடி இருக்கிறது. மனிதனிடத்து உண்டாகிற மாறுதலுக்கேற்ற காட்சியை உலகம் அவனுக்கு நல்குகிறது. முதுமையில் பெரிதும் ஆசைகள் நிறைவேருது ஏமாற்றமடைந்து கெட்டுப் போன நிலையில் மனது இருக்கிறது. அத்தகைய மனமுடை யவனுக்கு உலகம் கெட்டுப்போய் விட்டது. நல்ல மனமுடை யவனுக்கோ உலகமும் நல்லதாகத் தோன்றுகிறது. ஆத லால்தான் திருக் அல்லது காண்போனிடத்து உண்டாகிற மாறுதலுக்கு ஏற்ப திருஸ்யம் அல்லது காணப்படு பொருளி டத்தும் மாறுபாடுகள் கற்பிக்கப்படுகின்றன.

திருக் ஆக இருக்கின்ற ஜீவன் குழந்தையாகப் பிறந் திருக்கிற பொழுது தன் அன்னையால் காப்பாற்றப்படு கிறது. குழந்தையானது தன் அறிவுக்கேற்றவாறு அன்னை யையும் உலகையும் பொருள்படுத்துகிறது. தன்னைக் காப் பாற்றுபவள் தன் அன்னை என்று அது உணருகிறது. உல கனைத்தையும் காப்பாற்றுபவள் தன் அன்னையென்று அது

கற்பித்துக்கொள்கிறது. அக்கற்பனையில் குற்றம் ஒன்றும் இல்லை. ஏனென்றால் குழந்தை தன் அன்னையின் மீது பூரண நம்பிக்கை வைத்திருக்கிறது. திருக் ஆகிய குழந்தையின் மனப்பான்மைக்கு திருசியமாகிய தாயும் உலகமும் அப்படித் தென்படுகின்றன. இக்கோட்பாடு கடவுள் வழிபாட்டுக்கும் உரியதாகிறது. வழிபடுகிறவனுடைய மனப்பான்மைக்கு ஒப்ப வழிபடு தெய்வம் உணரப்படுகிறது. வழிபடுகிறவன் தன்னை ஒரு குழந்தையின் நிலையில் வைத்துக்கொண்டால் வழிபடு தெய்வத்தை அவன் தன் அன்னையாகக் கருதுகிறான். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது ஆயுட்காலம் முழுதிலும் தம்மை ஒரு குழந்தையின் நிலையில் வைத்துக்கொண்டார். ஆதலால் தெய்வத்தைத் தம்மைக் காத்தருளும் அன்னை பராசக்தியாகக் கருதினர். உலகையெல்லாம் காப்பாற்றுபவள் தன் தாய் என்று சாதாரணக் குழந்தையொன்று கற்பித்துக் கொள்கிறது. ஆனால் தெய்வீகம் நிறைந்த ராமகிருஷ்ணர் போன்ற குழந்தைகள் உலகனைத்தையும் ஆதரிப்பவள் அன்னை பராசக்தி என்று உணர்வது கற்பிதமல்ல, அது தான் தெய்வத்தைப்பற்றிய உண்மை. ஆத்மசாதகன் ஒருவன் தன்னை ஒரு குழந்தையாயிருக்கும் நிலையில் வைத்து அன்னே அனே எனும் சிலசமயம் உணர்வதாகத் தாயுமானவர் இயம்புகிறார்.

சிறிது சிறிதாக வளர்ந்து குழந்தைக்கு அறிவு தோன்றுகிற இடத்து தாயானவள் குழந்தையின் தந்தையை அதற்கு அறிமுகப்படுத்தி வைக்கிறாள். பிறகு தந்தையோடும் அச்சிறுவன் இணக்கம் கொள்ளுகின்றான். தந்தையை அறிந்து கொள்ளும் அறிவு அவனுக்கு வரும்பொழுது தன் தாயையும் தன்னையும் பரிபாலித்து வருபவர் தந்தை என உணர்கின்றான். ஈண்டு திருக்கினுடைய அறிவு மாறியமைவதற்கு

ஏற்ப அவன் காண்கிற காட்சியும் மாறியமைகிறது. சாதகன் ஒருவன் தெய்வத்தை முதலில் அம்மையே என்று அழைத் தான். பிறகு அதே பொருளை அப்பா என்று அழைக் கிருன். இக்கோட்பாட்டை நின்னையே ஐயா ஐயா எனவே அலறிடும் சில சமயம் எனத் தாயுமானவர் கூறுகிருர். காண்போனிடத்து உண்டாகிற மனநிலைக்கேற்ப காணப் படு பொருளும் காட்சி கொடுக்கிறது.

உலகத் தாய் தந்தையர்களால் காப்பாற்றி வளர்க்கப் படுகிற சிறுவன் ஒருவன் எதிர்பாராது திடீரென்று விதி வசத்தால் தாய் தந்தையர்களை இழந்து விட்டான் என்று வைத்துக்கொள்ளுவோம். அவன் அக்கணமே அநாதை யாய் விடுகிருன். நல்ல பாதுகாப்பில் இருந்தவனுக்கு இப் பொழுது ஆதரவளிப்பார் யாருமில்லை. தன் பரிதாபகர மான நிலையை எண்ணி அவன் கதறிப் பதறி அழுகின்ருன். யார் வந்து எவ்வளவுதான் ஆறுதல் கூறினுலும் அவர்களு டைய கூற்று தாய் தந்தையர்களுடைய கூற்றுக்கு நிகர் ஆகாது. ஆத்ம சாதகன் ஒருவனுக்கு ஒருகாலம் இல்லா விட்டால் ஒருகாலத்தில் அத்தகைய பரிதாபகரமான நிலை வருகிறது. கடவுளைத் தாயாக எண்ணி அவன் வழிபட் டான்; பின்பு தந்தையாக எண்ணி வழிபட்டான். ஆயினும் தான் இன்னும் தெய்வத்தின் அனுக்கிரகத்துக்குப் பாத்திர மாகவில்லையே என்று ஒருகாலத்தில் அருள் தாகமெடுத்துத் தேம்பியழுகின்ருன். அத்தகைய பரிதாபகரமான நிலையை, அல்லாது பேய்போல அலறியே ஒன்றும் இலவாய் எனத் தாயுமானவர் விளக்குகிருர்.

உலக வாழ்க்கையில் அநாதையாய்ப் போய்விட்ட சிறுவனுக்கு உலகம் முழுதுமே இருள் சூழ்ந்ததாகத் தென் படுகிறது. கொஞ்ச நாளைக்குப் பிறகு தனக்கு ஆதரவு

அளிப்பவர்களாக உலகத்தவர்களுக்கிடையில் இம்மனிதர் இருக்கக்கூடுமோ அல்லது அம்மனிதர் இருக்கக்கூடுமோ என்று ஆராய்ச்சி செய்து பார்க்கிருன். அதே விதத்தில் கடவுளேக் கண்டறியாத சாதகன் அவரைக் கண்டறிதல் பொருட்டு தான் புதிய உபாயம் எதையேனும் கையாளுதல் அவசியமா என்று எண்ணிப்பார்க்கிருன். தனக்குத் தோன்றுகிற புதிய உபாயங்களேயும் கையாண்டு பார்க்கின்ருன். அவன் கையாளுகிற முயற்சிகளெல்லாம் குருடன் வழிகாண முயலுவதற்கு ஒப்பாகின்றன. வழி தெரியாதவிடத்தும் குருடன் தன் முயற்சியை நிறுத்திவிடுவதில்லே. கையால் தொட்டுப்பார்த்து, காலால் தடவிப்பார்த்து, பக்கத்தில் யாராவது இருக்கிருர்களா என்று விசாரித்துப் பார்த்து அவன் வழி தேடிக்கொண்டேயிருக்கிருன். கடவுள் நாட்டம் கொண்டிருக்கிறவனும் அங்ஙனம் முயலுகிருன். ஆனுல் அவனுடைய முயற்சியோ இன்னும் தீவிரமானது. அவனுடைய நிலேமையை பின் ஏதும் அறியாமல் ஒன்றை விட்டு ஒன்றைப் பிதற்றிடும் சிலசமயம் எனத் தாயுமானவர் இயம்புகிருர்.

பிறகு ஆராய்ச்சியின் மூலமாகவும் ஐதிகமாகக் கேட்டறிந்திருப்பவைகள் மூலமாகவும் கடவுள் ஒளிப் பிழம்பு சொரூபம் என்னும் கேள்வி ஞானம் ஆத்ம சாதகனுக்கு வருகிறது. ஆதலால் தீபம் ஏற்றிவைத்து அதைக் கடவுள் சொரூபமாக அவன் வணங்குகிருன். அசையாது எரிந்துகொண்டிருக்கிற தீப ஒளிப்பிழம்பைப் பார்த்து அதையே தியானித்துக் கொண்டிருக்கும் சாதகர்கள் உளர். அதனுல் மனது ஓரளவு குவிகிறது. மனத்தெளிவும் அதற்கேற்றவாறு வருகிறது. ஆனுல் அத்தீபம் காற்றடிக்கும்பொழுது அணேந்து போய் விடுகிறது. அழிந்துபட்டுப்போகாத பரம்பொருளுக்கு இது

எப்படிச் சின்னமாகும் என்னும் ஐயம் எழுகிறது. அடுத்த படியாக சந்திரனையும் சூரியனையும் ஜோதி சொருபமாகக் கருதி வழுத்துபவர்கள் இருக்கிறார்கள். பின்பு சந்திர வெளிச்சம் வளரவும் தேயவும் செய்கிறது. ஆகையால் அது பரம்பொருளுக்கேற்ற சின்னமாகாது. சூரியன் பெரிதும் பரம் பொருளுக்கேற்ற ஸ்தூல வடிவினனாக இருக்கிறான். சூரிய நாராயணனாகவும் சாவித்திரி தேவியாகவும் கருதி சூரியன் வழுத்தப்படுகிறான். இத்தகைய சூரியனும் பிரளய காலத்தில் தன் ஒளியை இழந்து ஒடுங்கிவிடுகிறான். ஆகையால் பரம்பொருளுக்குச் சின்னமாக சூரியன் அமைந்திருப்பதிலும் ஏகதேச உண்மைதான் உளது. இனி, பரமாத்மாவின் ஒளி சூரிய வெளிச்சத்தால் விளக்கப்படுவதன்று; சந்திரன் நட்சத்திரங்களால் விளக்கப்படுவதன்று; மின்னலால் விளக்கப்படுவதன்று; அக்கினியினால் விளக்கப்படுவதன்று. அது தன் சுயப்பிரகாசத்தால் யாண்டும் ஒளிர்ந்துகொண்டிருக்கிறது என்று சாஸ்திரங்கள் காட்டுகின்றன. பரப்பிரம்மத்தின் ஒளியினின்றே சந்திர சூரியன் போன்றவைகள் தங்கள் ஒளியைப் பெறுகின்றன என்றும் இயம்பப்பட்டிருக்கிறது. அத்தகைய பரமாத்மாவின் பிரதி பிம்பமாக ஜீவாத்மன் இருக்கிறான். ஆதலால் இந்த ஜீவாத்மனிடத்தும் பரமாத்மாவின் இயல்பு சிறிதளவாவது அமைந்திருக்க வேண்டும். நாம் ஆராய்ந்து பார்க்குமிடத்து அவ்வுண்மையும் நமக்கு விளங்குகிறது. ஜீவாத்மன் ஒருவன் ஓர் இருட்டறையில் அமர்ந்திருக்கிறான். அப்பொழுது அவனுடைய உடல் கட்புலனாவதில்லை. ஆனால் இருக்கிறேன் என்கின்ற உணர்வு தன்னைத்தானே விளக்கிக்கொண்டிருக்கிறது. இருக்கிறேன் என்னும் உணர்வை விளக்குப் பிடித்துப் பார்க்கவேண்டியதில்லை. சூரிய வெளிச்சம் சந்திர வெளிச்சம் முதலியன

அதற்குத் தேவையில்லை. தான் இருப்பதை அது தானே விளக்குகிறது. இருக்கிறேன் என்கின்ற உணர்வை உபாசிப்பதே கடவுள் வழிபாடு எனக் கூறப்பட்டிருக்கிறது. அதுதான் ஆத்மாவின் ஒளியாகிறது. இக்கோட்பாட்டை மேல் பேசரிய ஒளி என்றும் எனத் தாயுமானவர் கூறுகின்றனர்.

பிரபஞ்சத்திலுள்ள யாவும் எல்லையில் அடங்கியவைகள். ஆனால் அவைகளுள் ஆகாச தத்துவம் ஒன்று மட்டும் எல்லையிலடங்காது அகண்டாகாரத்தில் விரிந்தோடுகிறது. அத்தகைய ஆகாசமும் பிரளய காலத்தில் இல்லாது போய் விடுகிறது. அது ஜடவெளி. அதற்கு நிகராக பரவெளி தோற்றமும் ஒடுக்கமும் இல்லாது யாண்டும் இருந்துவருகிறது. அப்பரவெளியைக் கருத்தில் வைத்து வணங்குவார் உளர். அக்கோட்பாட்டை வெளியென்றும் எனத் தாயுமானவர் கூறுகிறார்.

கடவுளை அறிந்துகொள்ளுதற்கு மற்றோர் எளிய உபாயம் ஆத்ம சாதகர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. பரம் பொருள்தான் ஓசை ஒலி யெல்லாம் ஆனது என்பது அக் கோட்பாடு. சிருஷ்டியில் ஓசை முதலில் தோன்றுகிறது. அந்த ஓசை பல வடிவெடுக்கிறது. ஓசையின் புறத்தோற்றங்களாகப் பிரபஞ்சம் அனைத்தும் ஆயிருக்கின்றன. அந்த ஓசையின் தொகை பிரணவம் அல்லது ஓங்காரம் எனப்படுகிறது. ஓங்காரத்தை உச்சரிப்பதும் தியானிப்பதும் ஜபிப்பதும் நல்ல ஆத்மசாதனமாகிறது என்பது கோட்பாடு. இக் கருத்தை நாதாதி பிறவுமே நிலைய மென்றும் எனத் தாயுமானவர் நவிலுகிறார்.

இனி, பரம்பொருளை உபாசிப்பதற்கு மற்றோர் உபாயம் கூறப்பட்டிருக்கிறது. பிரபஞ்ச வஸ்துக்களெல்லாம் நீளம்

அகலம் கனம் என்னும் அளவைகளே உடைத்திருக்கின்றன. இந்த அளவைகளே ஒடுக்கிக்கொண்டே போனல் நுண்ணிய திலும் மிக நுண்ணியதாக அது ஒடுங்கிவிடுகிறது. அளவை அற்றதாக அது சுருங்கிவிடுங்கால் அதற்கு அணு என்னும் பெயர் வருகிறது. அந்த அணுவைக் கருத்தில் வைப்பதும் நல்ல கடவுள் வழிபாடு ஆகிறது என ஆன்ருேர் கூறுகின்ற னர். அதை அனுசரித்து தன் நேர் இல்லாததோர் அணு என்றும் எனத் தாயுமானவர் இயம்புகின்ருர்.

கடவுள் வழிபாட்டுக்கு மற்ருெரு முறை மக்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது. காலத்தை நாம் அனைவரும் ஓயாது கருத்தில் வாங்கிக் கொண்டிருக்கின்ருேம். இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையிலுள்ள இடையீடு காலம் எனப்படு கிறது. சூரியோதயம் ஒரு நிகழ்ச்சி; சூரிய அஸ்தமனம் மற்ருெரு நிகழ்ச்சி. இவ்விரண்டுக்கும் இடை நேரமாயிருப் பது பகல் எனப்படுகிறது. பிறகு சூரிய அஸ்தமனத்துக்கும் உதயத்துக்கும் இடையில் இருப்பது இரவு எனப்படுகிறது. இவ் இரவு பகல் காலசொரூபம். இந்தக் காலம் முன்பு துவக்கம் என்பதை அறியாததாக யாண்டும் இருந்திருக் கிறது. இதே காலம் பின்பும் யாண்டும் இருந்துவரும். இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் என்பதெல்லாம் ஆதி யந்தமில்லாத நெடுங்காலமாக விரிவடைகிறது. இந்தக் கால சொரூபமாகக் கடவுள் இருக்கிருர். காலத்தைச் சரியாகப் பயன்படுத்துவது கடவுள் வழிபாடு. காலத்தைப் போற்றுவது கடவுளைப் போற்றுவதற்கு ஒப்பு. இக்கோட் பாட்டை மூவிதத் தன்மையாம் காலமென்றும் சாற்றிடும் எனத் தாயுமானவர் கூறுகிருர்.

இப்படியெல்லாம் பகர்வதில் பரம்பொருள் விளக்கம் பூர்த்தியாய்விடுவதில்லை. யானையைப் பார்க்கச் சென்ற

குருடர்கள் சிலர் அதன் துதிக்கை, கால், வால், வயிறு, காது முதலியவைகளைத் தொட்டுப் பார்த்துவிட்டு வெவ் வேறு விதங்களில் யானையை விளக்கினர். அவர்களுடைய விளக்கத்திலே ஏகதேசம் உண்மை இருக்கிறது. யானை யைப்பற்றிய முழு உண்மையை அவர்கள் யாரும் அறிந்தி லர். அதே விதத்தில் பரம்பொருளுக்கு எண்ணிறந்த விளக் கங்கள் இருக்கின்றன. அவ்விளக்கங்களின் தொகையில் அவருடைய சொரூபம் அடங்கியதன்று. அதற்கப்பாலும் விளக்கமுடியாத பகுதிகள் எத்தனை யெத்தனையோ இருக் கின்றன. அவ்வுண்மையை சிலசமயம் இவையாகி வேற தாய் என்கிறூர் தாயுமானவர்.

இத்தனைவிதமான முறைகளிலே கடவுளை உபாசித்துப் பார்த்தான பிறகு சாதகன் பரம்பொருள் உபாசனையை நாடி, தன்னிடத்தே வந்தாக வேண்டும். ஏனென்றூல் பரம் பொருளிடத்திருந்தே தான் வந்துள்ளான். தங்கத்தினின்று நகை வந்துள்ளது. நகை தங்கத்துக்கு அன்னியமானதல்ல. பரம்பொருளிடத்திருந்து ஜீவாத்மன் வந்துள்ளான். ஆத லால் ஜீவாத்மன் பரம்பொருளுக்கு அன்னியமானவனல்லன். ஜீவாத்மசொருபத்தின் பெருநிலை யாது என்று பிறகு சிந்தித்துப்பார்க்கவேண்டும். ஜீவாத்மன் எவ்வளவுக் கெவ்வளவு அறிவு சொரூபமாகின்றூனே அவ்வளவுக்கவ்வ ளவு அவன் மேம்பட்ட ஜீவன். ஜீவாத்மன் எவ்வளவுக் கெவ்வளவு தங்குதடையற்ற ஆனந்த சொரூபமாகின்றூனே அவ்வளவுக் கவ்வளவு அவன் மேல்நிலை யெய்திய ஜீவாத்மன் ஆகின்றூன். அவனிடத்து மிளிர்கின்ற அறிவையும் ஆனந்தத் தையும் மேலும் மேலும் ஓங்கும்படி செய்வதே நல்ல கடவுள் வழிபாடாகிறது. அவனிடத்துள்ள அறிவு வாலறிவாக விரிந்துவிடுமாகில், அவனிடத்திருக்கும் ஆனந்தம் பரமானந்த

மாகப் பரிணமித்துவிடுமாகில் அவன் பரமாத்மாவை அணு கியவன் ஆகிருன். இக்கோட்பாட்டை சதாஞான ஆனந்த மாய் என்று தாயுமானவர் இயம்புகிருர்.

இதுகாறும் கடவுளைப்பற்றி இயம்பிவந்துள்ள கோட் பாடுகளெல்லாம் உண்மையானவைகளே. சாதனங்கள் புரிவ தற்கு ஒவ்வொரு கோட்பாடும் பயன்படுகிறது. ஆத்ம சாத னத்தில் குழந்தைப் பருவத்திலிருக்கும் சாதகன் கடவுளைத் தாய் என்று அழைக்கிருன், பிறகு அவரைத் தந்தையென் கிருன். அவன் பரிபாகம் அடைந்துகொண்டு வரவர அவரு டைய சொரூபமும் படிப்படியாக அவனுக்கு மாறியமை கிறது. இறுதியில் தனதறிவாகவும் தனது பேரின்பமாகவும் மிளிர்ந்துகொண்டிருப்பது பரமாத்மனே என சாதகன் அறிந்து கொள்கின்ருன். இனி, எத்தனையெத்தனை ஆத்ம சாதகர்கள் இருக்கிருர்களோ அத்தனையத்தனை விதங்களில் அதே பரமாத்மன் அவர்களால் அறிந்துகொள்ளப்படுகிருர். ஆதலால் அவருடைய சொரூபத்துக்கும் மகிமைகளுக்கும் விபூதிகளுக்கும் முடிவேயில்லை. அகண்டாகாரத்தில் அவை கள் விரிந்தோடிக் கொண்டிருக்கின்றன. அவையாவையும் எடுத்து விளக்க அனந்தங்கோடி ஜீவாத்மாக்களுக்கே இயலுவதில்லை. இக்கோட்பாட்டை, என்னே யெனே கருணைவிளையாட்டு இருந்தவாறு? எம்மனோர் புகல எளிதோ? எனத் தாயுமானவர் பரமனைப் போற்றுகிருர். இக்கருத்துக்கள் யாவும் மேலே கூறிய பாடலில் அடங்கி யுள்ளன.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 3

வேதமுடன் ஆகம புராணம்இதி காசமுதல்
வேறுமுள கலேகளெல்லாம்
மிக்காக அத்துவித துவிதமார்க் கத்தையே
விரிவா யெடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை
உண்டுபணு ஞானமாகும்
ஊகம்அனு பவவசன மூன்றுக்கும் ஒவ்வுமீ
துபயவா திகள்சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போதும்
யாதொன்று பாவிக்கநான்
அதுவாத லாலுன்னே நானென்று பாவிக்கின்
அத்துவித மார்க்கமுறலாம்
ஏதுபா வித்திடினும் அதுவாகி வந்தருள்செய்
எந்தைநீ குறையுமுண்டோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

உலகிலுள்ள மதங்களுள் இந்து மதத்துக்குத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. மற்ற மதங்கள் ஒவ்வொன்றுக்கும் ஏதோ ஒரு நூல்தான் சாஸ்திரப்பிரமாணமாக அமைந்திருக்கிறது. அந்த ஒரு நூலேப் புறக்கணித்துவிட்டால் அல்லது அதனுள் குறைபாடு கண்டுபிடித்துவிட்டால் அந்த மதத்துக்கே இழுக்கு வந்துவிடுகிறது. ஆதலால் அம்மதங்கள் சாஸ்திரப்பிரமாணம் என்னும் வலிவு மிகப் படைத்தவைகள் அன்று. ஆனல் இந்து மதத்துக்கோ சாஸ்திரங்கள் ஏராளமாக அமைந்திருக்கின்றன. அந்த சாஸ்திரங்களே

நாம் எவ்வளவு கண்டிப்பாக வேண்டுமானாலும் ஆராய்ச்சி பண்ணலாம். அவைகளினுள் ஊழல் ஏதேனும் இருக்குமாகில் அவைகளைத் தங்குதடையின்றி எடுத்துக்காட்டி அவைகளைத் தவிர்க்கும்படியும் தூண்டலாம். அதற்கெல்லாம் இந்துமதம் இடம் கொடுக்கிறது. மற்ற மதங்களுக்கு அமைந்துள்ள நூல்களை யுக்திபூர்வமாக ஆராய்ச்சி பண்ணுவதற்கு அவைகள் அனுமதி தருவதில்லை. அந்தந்த மதங்களுக்குரிய சாஸ்திரங்களில் குற்றம் காண்பது கடவுளுக்குச் செய்யும் அபராதம் என அம்மதங்கள் கருதி வருகின்றன. ஆனால் இந்துமதப்படி நூல்களை எவ்வளவு துருவியாராய்ந்தாலும் அவைகளிடத்துக் குறைகள் கண்டாலும் அது கடவுளுக்கு விரோதமாகச் செய்யப்பட்டுள்ள குற்றமாகாது. அது மட்டுமல்ல; சாஸ்திரங்கள் அனைத்தையும் கடந்து அவைகளுக்கும் எட்டாத மேல் நிலைக்குப் போவதுதான் ஆத்ம சாதனத்தின் குறிக்கோள் என இந்துமதம் பகர்கிறது. மாடிக்குப் போக விரும்புகிற ஒருவன் படிக்கட்டிலுள்ள ஒவ்வொரு படியையும் புறக்கணித்துவிட்டு மேலேறுவது போன்று சாஸ்திரங்களையும் கடந்து மேலே போவதுதான் குறிக்கோள். இது ஆத்ம சாதன சம்பந்தமான ஓர் அடிப்படைத் தத்துவமாகும். வேதங்களையும் கடந்து மேல்நிலைக்குப் போவாயாக என்று இந்துமதத்துக்குரிய நூல்கள்தான் துணிந்து சொல்லியிருக்கின்றன. நூலாராய்ச்சி ஆத்ம சாதனத்துக்குப் பெரிதும் பயன்படுகிறது எனினும் நூல்களிலே மனிதன் கட்டுண்டவனாகலாகாது. கிரந்தங்கள் எல்லாம் கிரந்திகள், அதாவது முடிச்சுகள் என்று அவைகள் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. மனிதன் அம்முடிச்சுக்களில் தளைக்கப்பட்டவன் ஆகலாகாது. இத்தகைய சுதந்தரத்தையும் உயர்ந்த லட்சியத்தையும் இந்து மதம் மக்களுக்குக் கொடுத்திருக்கிறது.

உலகில் தோன்றியுள்ள நூல்களுள் இந்துமதத்துக் குரிய நான்கு வேதங்களே மிகப் பழையவைகள். அவைகள் எக்காலத்தில் தோன்றியவைகள் என்று நிர்ணயித்துச் சொல்ல முடியாது. வேதங்களில் சொல்லப்பட்டிருக்கின்ற விஷயங்கள் எல்லாம் பிரபஞ்ச வாழ்க்கை சம்பந்தப்பட்ட வைகள். சொர்க்கப் பிராப்தியும் பிரபஞ்சத்தில் அடங்கி யிருக்கிறது. பிரபஞ்சத்தைத் தாண்டி அதற்கப்பாலுள்ள ஒரு பெருநிலையை மனிதன் எட்டமுடியும். அதற்கான வழி களையும் வேதங்கள் காட்டியிருக்கின்றன. அந்த வழிகள் ஞானமார்க்கம் எனக் கூறப்படுகின்றன. வேதங்களில் ஞானமார்க்கத்தைப் புகட்டுகிற பகுதிகள் வேதாந்தம் என் றும் உபநிஷதங்கள் என்றும் பகரப்படுகின்றன. இப்படி வேதங்களில் சொல்லி வைத்துள்ள விஷயங்களைக் காலத் துக்கேற்றபடி மாற்றியமைத்துள்ள நூல்கள் ஆகமங்கள் எனப்படுகின்றன. புதியதாக வருவிக்கப்பட்டவைகள் என் பது அதன் பொருள். பழைய தத்துவங்களுக்கு இழுக்கு ஏதுமின்றி புதிய முறைகளைக் கையாண்டு அவைகளை அனுஷ்டிக்கலாம். அப்படி நாம் பயன்படுத்துகிற புதிய முறைகளே ஆகமங்கள் எனப்படுகின்றன. இனி, தத்துவங் களை எல்லோருக்கும் எளிதில் புரியும்படி கதைகள் மூலமா கப் பகருமிடத்து அக்கதைகள் புராணங்கள் எனப் பகரப் படுகின்றன. அவதார மூர்த்திகளின் பூலோக லீலைகளை விரிவாக எடுத்து விளக்கும் நூல்களை இதிகாசம் என் கிறோம். தசரதராமனுடைய பூலோக வாழ்வை ராமாயணம் என்னும் இதிகாசம் எடுத்து விளக்குகிறது. ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் அவதார மகிமைகளை மகாபாரதம் என்னும் இதிகாசம் விளக்குகிறது. ஆக, இவை இரண்டும் இந்து மதத்துக்குரிய சிறந்த இதிகாசங்களாம். இவைகளல்லாது

இன்னும் பலப்பல சமய நூல்களும் சாஸ்திரங்களும் இந்து மதத்தில் ஏராளமாகப் புதைந்து கிடக்கின்றன. அவையா வையும் தொகுத்து வேதமுடன் ஆகம புராணம் இதிகாசம் முதல் வேறும் உள கலைகள் எல்லாம் என்று தாயுமானவர் கூறுகிறார்.

இனி, இத்தனைவித சாஸ்திரங்களில் அடங்கியிருக்கும் முடிவான கருத்துத்தான் என்ன என்னும் கேள்வி யெழு கிறது. பிரபஞ்சம் உயிர்களினது வாழ்வுக்குரிய அரங்கமாக அமைந்திருக்கிறது. உயிர்கள் பலப்பல உடல்களை வினைக் கேற்றவாறு எடுத்து இப்பிரபஞ்சத்தில் வாழ்ந்து வருகின் றன. உயிர்களின் வாழ்க்கையோ ஜனன மரணமாக மாறி மாறியமைந்து வருகிறது. இப்பிரபஞ்சத்துக்கும் உயிர்களுக் கும் ஆதிநாயகனாகக் கடவுள் இருக்கிறார். ஆகவே, கடவு ளைப்பற்றியும் உயிர்களைப்பற்றியும் பிரபஞ்சத்தைப் பற்றியும் இந்த சாஸ்திரங்களெல்லாம் விரிவாகப் பகர்ந்துவருகின்றன. இம்மூன்று தத்துவங்களும் முறையே ஜகத், ஜீவன், பரம் எனப்படுகின்றன. இம்மூன்று தத்துவங்களுக்கும் இடை யில் உள்ள இணக்கமும் இந்நூல்களிலே கூறப்பட்டிருக் கிறது. அந்த இணக்கமானது மூன்றுவித வடிவெடுத்திருக் கிறது. ஜகத், ஜீவன், பரம் ஆகிய முப்பொருள்களும் தனித் தனியாக இருக்கின்றன என்னும் கோட்பாடு துவைத மதம் எனப்படுகிறது. மனிதனுடைய உயிர்வாழ்க்கையினின்று பிரித்து வைக்கமுடியாதபடி உடலும் அதன் உறுப்புக்களும் உயிரைச் சார்ந்திருப்பது போன்று ஜகத்தும் ஜீவனும் பரம் பொருளைச் சார்ந்திருக்கின்றன என்னும் கொள்கை விசிஷ் டாத்வைத மதம் எனப்படுகிறது. பரம்பொருளிடத்திருந்தே ஜகத்தும் ஜீவனும் வந்திருப்பதால் அவைகள் பரம்பொரு ளுக்கு அன்னியமானவைகள் அல்ல; பரம்பொருள் ஒன்றே

ஜகத் ஆகவும் எண்ணிறந்த ஜீவர்கள் ஆகவும் தோன்றிக் கொண்டிருக்கிறது. பரம்பொருளுக்குப் புறம்பாக ஒரு பொருளும் இல்லை என்னும் கொள்கை அத்வைத மதம் எனப் படுகிறது. இப்படி இந்த மூன்று மதங்களைப்பற்றிப் பேசு கிறபொழுது இடையில் இருக்கின்ற விசிஷ்டாத்வைத மதம் தொக்கி நின்றுவிடுகிறது. பாதாதிகேசம் என்று சொல்லு கிறபொழுது உடலில் இடையில் இருக்கிற உறுப்புகளும் அவ்விளக்கத்தில் அடங்கிவிடுகின்றன. அப்படி துவைத மதம் முதல் அத்வைதம் வரையில் என்று இயம்புகிற பொழுது விசிஷ்டாத்வைதமும் அதில் அடங்கியிருக்கிறது. இந்த சாஸ்திரங்கள் அனைத்தும் இந்த மூன்று சம்ப்ரதாயங் களையே வெவ்வேறு விதங்களில் விளக்கி வருகின்றன என் னும் கோட்பாட்டை மிக்காக அத்துவித துவித மார்க்கத் தையே விரிவாய் எடுத்துரைக்கும் என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

ஜகத், ஜீவன், பரம் ஆகிய முப்பொருள்களைப்பற்றியும் துவைதம்,விசிஷ்டாத்வைதம்,அத்வைதம் ஆகிய மூன்று மதங் களைப்பற்றியும் நாம் இன்னும் கொஞ்சம் விரிவாகஅறிந்திருப் பது சாதனத்துக்குப் பயன்படும். அண்டங்கள் அனைத்தும் தொகுத்தெடுத்து ஜகத் என்று சொல்லப்படுகிறது. இது ஐம் பூதங்களால் ஆனது; எல்லையில் அடங்காதது. ஆனால் ஐம் பொறிகளாலும் அந்தக்கரணங்களாலும் நுகரப்படுபவைகள் யாவும் ஜகத் என்னும் பொதுப்பெயர் பெற்றுள்ளன. மண் ணுலகம் விண்ணுலகம், பாதாளம் சொர்க்கம் ஆகிய யாவும் ஜகத் என்னும் சொல்லில் அடங்கிவிடுகின்றன. இந்த ஜகத் திலேஎண்ணிறந்தஜீவாத்மாக்கள்வாழ்ந்திருக்கின்றன.வினை களுக்கு ஏற்ப அவைகள் புல் முதல் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மா பரியந்தம் பலப்பல பிறவிகளையெடுத்து வருகின்றன.

ஜகத்தினுடைய ஜடநிலையும் பரமாத்மாவினுடைய சேதன நிலையும் ஜீவர்களிடத்துத் தென்படுகின்றன. ஜீவர்கள் பெற்றுள்ள அறிவு, உணர்வு எல்லாம் சேதனத்தின் விகாரங்களாம். ஜீவர்கள் படைத்துள்ள உடல்களெல்லாம் ஜகத்தின் கூறுகளாம். பரமாத்மா ஜகத்துக்கும் ஜீவர்களுக்கும் ஆதாரமாயிருக்கிறார். இவைகளைத் தம் அகத்து அமைத்து வைத்திருக்கிறார். இவைகளுக்கு அப்பாலாகவும் அவர் இருக்கிறார். அப்பாற்பட்டவராக இருக்கும் நிலை பரம் எனப் பகரப்படுகிறது. ஜகத்தோடும் ஜீவர்களோடும் சேர்ந்துள்ள நிலை கடவுள் எனவும் ஈசுவரன் எனவும் பகவான் எனவும் பகரப்படுகிறது. இனி, மூன்று மதங்களையும் நாம் நாள்தோறும் பெற்றுவருகிற மூன்று அவஸ்தைகள் வாயிலாக நன்கு அறிந்துகொள்ளலாம். ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி என்பன மூன்று அவஸ்தைகள். அவைகளை முறையே நனவு, கனவு, கனவற்ற உறக்கம் என்கிறோம். நனவு அல்லது ஜாக்கிரதா அவஸ்தையில் நாம் துவைத நிலையில் இருக்கிறோம். நாம் அதில் காண்கின்ற உயிர்களெல்லாம் தனித்தனியானவைகள். நாம் அதில் காண்கின்ற உலகங்களும் தேசங்களும் தனித்தனியானவைகள். ஆக, துவைத மதத்தை அறிந்து கொள்ளுதற்கு ஜாக்கிரதா அவஸ்தை நன்கு பயன்படுகிறது. எண்ணிறந்த உயிர்களையும் உலகங்களையும் அவையாவுக்கும் ஆதாரமாயிருக்கிற பரவஸ்துவையும் ஜாக்கிரதா அவஸ்தையில் ஏகதேசம் அறிந்துகொள்ளுகிறோம். ஆதலால் ஜாக்கிரதா அவஸ்தையில் என்னென்ன நுகரப்படுகின்றனவோ அதெல்லாம் துவைத மதத்துக்கு உரியவைகளாம். ஜாக்கிரதா அவஸ்தை எவ்வளவுக்கெவ்வளவு நித்தியமானதோ அவ்வளவுக்கவ்வளவு துவைத மதமும் நித்தியமானதே.

இனி, விசிஷ்டாத்வைதம் என்பதை சொப்பனவஸ்தையில் நாம் பெறுகிற அனுபவத்தின் மூலம் நன்கு அறிந்து கொள்ளலாம். கனவிலே கணக்கற்ற உலகங்களையும் உயிர்களையும் காண்கிறோம். ஆனால் அவையாவும் நமது மனதின் விகாரங்களாம். நமது மனதுக்கு அன்னியமாக அவைகளுக்கு நிலைபேறு கிடையாது. மனம் ஒடுங்குகிற இடத்து அவையாவும் மறைந்து போய்விடுகின்றன. அதே விதத்தில் ஜகத், ஜீவன் என்கின்ற பிரம்மாண்டத்தின் விகாரங்களெல்லாம் ஈசுவரன் என்னும் பெரிய புருஷனது மனதின் விகாரங்களாம். அப்புருஷனுக்கு அன்னியமாக அவைகளுக்கு நிலைபேறு கிடையாது.

சுஷுப்தி அவஸ்தை அல்லது கனவற்ற உறக்கம் அத்வைதத்தை நன்கு விளக்குகிறது. அந்நிலையில் ஜகத்தும் ஜீவனும் இடம் பெறுவதில்லை. காண்போன், காணப்படுபொருள் என்னும் பேதமில்லை. அஸ்மிதை அல்லது இருக்கிறேன் என்கிற உணர்வு அபேதமாய் நிர்விகாரமாய் இருக்கிறது. அது இரண்டற்ற நிலை. ஆதலால் அது அத்வைதம் எனப்படுகிறது. இந்த மூன்று நிலைகளும் மாறி மாறி வெவ்வேறு விதங்களில் நமக்குப் பயன்பட்டு வருகின்றன. ஆதலால் ஆத்ம சாதகனுக்கு துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று நிலைகளும் தேவையானவைகளேயாம். இக்கோட்பாட்டை ஓதரிய துவிதமே அத்துவித ஞானத்தை உண்டுபண்ணும் ஞானமாகும், எனத் தாயுமானவர் கூறுகிறார்.

நமது தினசரி வாழ்வில் அவஸ்தைகள் மாறி அமைவதற்கேற்ப மனிதன் துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய இந்த மூன்று நிலைகளிலும் மாறி மாறி இருந்துவருகிறான். இம்மூன்றும் மனிதனுடைய ஞானத்தை

வளர்ப்பதற்கு உரியவைகளாய் இருக்கின்றன. ஆயினும் இம் மூன்றனுள் துவைதமே ஞான வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகிறது. அது எப்படி என்று பார்ப்போம். மனிதன் விழித்திருந்து தனது அன்றாடக் கடமைகளைத் தீவிரமாகச் செய்கிறான். மெய்வருந்த உழைப்பவனுக்கே இரவில் நல்ல உறக்கம் வருகிறது. ஆக, துவைத நிலையை நன்றாகப் பயன் படுத்துகிறவனுக்கு கனவற்ற உறக்கம் என்னும் அத்வைத நிலை வாய்க்கிறது. நவீன பௌதிக விக்ஞானம் பிரபஞ்சத் திலுள்ள பொருள்களையெல்லாம் துருவியாராய்ந்ததில் பலப் பல பொருள்களாக இருந்தவைகளெல்லாம் ஒன்றில் ஒன்று ஒடுங்கிக் கடைசியில் ஒரு பொருளில் வந்து முடிவு பெற்றி ருக்கின்றன. ஆனால் அந்த ஒரு பொருளை இன்னதென்று விளக்குதற்கு பௌதிக விக்ஞானத்துக்கு இயலவில்லை யென்றாலும் இறுதியிலிருப்பது ஒருபொருளே என்னும் முடிவுக்கு அது வந்திருப்பது பாராட்டுதற்குரிய விஷயமாம். இனி, எண்ணிறந்தவைகளாயிருக்கின்ற உயிர்வகைகளை யெல்லாம் ஆராய்ந்து பார்க்கப்பார்க்க அவையாவும் ஓர் உயிராக ஒன்றித்துவிடுகின்றன. மனிதன் அரும்பெரும் தவம் பண்ணுவதற்கு ஏற்றதாயிருப்பது துவைதநிலை. பலப் பல கலைஞானங்களைக் கற்பதற்கு ஏற்றதாயிருப்பதும் துவைதநிலை. எல்லாத் துறைகளிலும் ஞான ஆராய்ச்சிக்கு ஏற்றதாயிருப்பது துவைத நிலையேயாம். அந்த ஞான ஆராய்ச்சியை ஆழ்ந்து செய்துகொண்டு போகுமிடத்து ஒவ்வொரு துறையிலும் அது அத்வைதத்தில் கொண்டுவந்து சேர்க்கிறது. ஆதலால் இந்த நிலைகளில் வைத்து ஆராய்ந்து பார்க்குமிடத்தும் ஓதரிய துவிதமே அத்வைத ஞானத்தை உண்டுபண்ணும் ஞானமாகும் என்பது உறுதியாகிறது.

நாம் கணக்குப் போடும்பொழுது அதற்கொரு விடை கிடைக்கிறது. அந்த விடை சரியா அல்லது தப்பா என்று

ஆராய்ந்து பார்ப்பதற்கு உபாயங்கள் சில இருக்கின்றன. இது கணித சாஸ்திரத்தைப் பற்றிய உண்மை. இனி, இப்பிரபஞ்சத்தைப்பற்றியும் இதற்கு ஆதாரமாயிருக்கிற பொருளேப்பற்றியும் ஆராய்ச்சி பண்ணும்பொழுது சில முடிவுகளுக்கு வருகிறோம். அம்முடிவுகள் சரியானவைகளா, அல்லவா என்று அறிந்துகொள்வதற்கு மூன்று உபாயங் கள் இருக்கின்றன. ஏற்கனவே முறையாக ஆராய்ச்சி பண்ணியவர்கள் என்ன முடிவுக்கு வந்தார்கள் என்று ஓர்ந்து பார்ப்பது ஒரு முறை. அதற்கு சுருதிப்பிரமாணம் என்று பெயர். ஆன்ரோர்களுடைய வாக்கை உண்மை யென்று ஏற்றுக்கொள்வது சுருதிப்பிரமாணமாகும். பின்பு, யுக்தி பூர்வமாக ஆராய்ந்து பார்ப்பது மற்ருெரு முறை யாகும். சுருதிப்பிரமாணம் என்று எடுக்கிற இடத்து ஒவ் வொரு மதஸ்தனும் தன் தன் மதசாஸ்திரங்களில் சொல்லி யிருப்பவைகளேயே சுருதிப்பிரமாணம் என்று வாதிக்க முன்வரலாம். ஆனுல் யுக்திப்பிரமாணத்தில் அக்குறைபாடு இல்லே. சரியாக நம்முடைய பகுத்தறிவைப் பயன்படுத்தி இயற்கையை ஆராய்ந்தால் உண்மையை நாம் எட்டியே யாகவேண்டும். அதற்கு உதாரணம் ஒன்று எடுத்துக் கொள்ளலாம். எங்கெல்லாம் புகை கிளம்புகிறதோ அங் கெல்லாம் தீயிருக்கிறது. சுமார் ஒருமைலுக்கப்பால் ஓரிடத் தில் புகை கிளம்பிக்கொண்டிருக்கிறது. ஆதலால் அந்த இடத்தில் தீயிருக்கிறது என்னும் சரியான முடிவுக்கு தீயைப் பார்க்காமலேயே நாம் வரலாம். அதில் பிழை யில்லே. அது யுக்திப் பிரமாணம். இனி, பிரத்தியட்சப் பிரமாணம் அல்லது சொந்த அனுபவப் பிரமாணம் என்பது ஒன்று இருக்கிறது. மூன்று பிரமாணங்களுள் அனுபவப் பிரமாணமே தலேயாயதாகிறது. அதற்கேற்ற சான்று

ஒன்று எடுத்துக்கொள்வோம். ஒருமனிதன் தான் உயிரோடு இருக்கின்றானா அல்லது செத்துப்போய்விட்டானா என்பதை அறிந்துகொள்வதற்கு எந்த வைத்தியரிடமும் போய்க் கேட்கவேண்டிய அவசியமில்லை; எந்த சாஸ்திரத்தைப் புரட்டிப் பார்ப்பதற்கும் அவசியமில்லை. தான் உயிர் வாழ்ந்திருப்பது தனது சொந்த அனுபவம். எனவே பிரத்தியட்சப் பிரமாணம் தலையாயதாகிறது. துவைத நிலையில் வைத்துச் செய்கிற ஆராய்ச்சிகளெல்லாம் அத்வைதத்தில் கொண்டுசேர்க்கின்றன என்பதற்கு இம்மூவிதப் பிரமாணங்களும் பயன்படுகின்றன. ஆதலால் **ஊகம் அனுபவம் வசனம் மூன்றுக்கும் ஒவ்வும்**, எனத் தாயுமானவர் பகர்கிறார். ஊகம் என்பது யுக்திப்பிரமாணம். அனுபவம் என்பது பிரத்தியட்சப்பிரமாணம். வசனம் என்பது ஆப்த வாக்கியம் அல்லது சுருதிப்பிரமாணம்.

ஜாக்கிரதா அவஸ்தையிலிருப்பவன் சொப்பனாவஸ்தைக்குப் போவதும், சொப்பனாவஸ்தையிலிருப்பவன் சுஷுப்தி அவஸ்தைக்குப் போவதும் சர்வசாதாரணமாக நிகழ்கிறது. மக்கள் எல்லோரும் அதை ஒத்துக்கொள்கின்றனர். இயற்கையில் உள்ளவைகளெல்லாம் பலவாகத் தென்பட்டுக் கொண்டிருக்கின்றன வெனினும் அவையாவும் பரம்பொருளில் அடங்கப் பெறுபவைகள் ஆகின்றன. அவ்வுண்மையை அத்வைதியும் ஒத்துக்கொள்கிறான்; துவைதியும் ஒத்துக் கொள்கிறான். ஆதலால் இக்கோட்பாட்டை **ஈது உபய வாதிகள் சம்மதம்**, என்கிறார் தாயுமானவர்.

மலையின் அடிவாரத்தில் மலையேறுதற்கு எண்ணிறந்த இடங்கள் இருக்கின்றன. ஆதலால் பாதைகளும் எண்ணிறந்தவைகளாகின்றன. மேலே போகப் போக இப்பாதைகள் ஒன்றோடொன்று சேர்ந்து விடுகின்றன. மலையுச்சி

ஒன்றுதான் இருக்கிறது. அங்ஙனம் முடிவான மெய்ப் பொருள் கடவுள் ஒருவரே. அவரிடத்து உயிர்களாகிய நாம் அனைவரும் இறுதியில் ஒடுங்கிவிடுகிறோம். ஜகத்தும் அவரிடத்து ஒடுங்கிவிடுகிறது. கேள்வியளவில் இதைத் தெரிந்து ஓர்ந்துகொண்டால் நாம் புரிகின்ற சாதனங்களுக்கு இவ்வுண்மை பெரிதும் பயன்படுகிறது. தேவையில்லாத கிரியா விசேஷங்களையும் சாதனவகைகளையும் நாம் செய்யவேண்டிய அவசியம் இல்லை. இவ்வுண்மையை **ஆதலால் எனக்கு இனி சரியை ஆதிகள் போதும்,** என்கிறார் தாயுமானவர். சரியையாதிகள் என்பன சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்காகப் பிரிகின்றன. இந்த நான்கினுள் முடிவான ஞானமாகிய அத்வைத ஞானத்தையே அனுஷ்டானத்துக்குக் கொண்டுவர முயலலாம். மற்ற சாதனவகைகள் எல்லாம் நல்ல விவேகத்துக்குத் தேவையில்லாதவைகள் ஆய்விடுகின்றன.

மனிதன் எண்ணுகிற எண்ணத்துக்கு ஏற்ப அவனுடைய வாழ்க்கைமுறையே மாறியமைகிறது. புல் முதல் பிரம்மாபரியந்தம் கணக்கற்ற உடல்வகைகளை ஜீவன் எடுத்திருக்கின்றான். அப்படி எடுத்த உடல்களெல்லாம் எண்ணுகிற எண்ணத்தை அனுசரித்தேயாம். நல்லவர்களோடு மனிதன் இணக்கம் வைத்து நல்லெண்ணத்தையே எண்ணுகிறபொழுது மனிதன் நல்லான் ஆகிறான். கெட்டவர்களோடு இணக்கம் வைத்துக் கீழான எண்ணங்களையெண்ணும்பொழுது மனிதன் கீழோன் ஆகின்றான். மனிதன் தெய்வத்தையே எண்ணி தெய்வ உணர்வில் ஊறியிருக்கிற பொழுது அவன் தெய்வசொரூபம் ஆய்விடுகின்றான். ஆழ்ந்து கிருஷ்ணனை எண்ணிய கோபியர்கள் தாங்களே கிருஷ்ண சொரூபம் ஆய்விட்டார்கள். ஆழ்ந்து சிவத்தை எண்ணிய

சிவபக்தர்களெல்லாம் சிவ சொரூபம் ஆய்விட்டார்கள். இது வாழ்க்கையைப் பற்றிய முடிவான உண்மை. இதை அனுஷ்டானத்தில் கொண்டுவருவதே சாதனங்களுள் தலை யாயது ஆகிறது. இக்கோட்பாட்டை யாதொன்று பாவிக்க நான் அதுவாதலால் உன்னை நான் என்று பாவிக்கின் அத்துவித மார்க்கம் உறலாம், என்கின்றார் தாயுமானவர்.

ஆத்ம சாதகர்கள் எல்லோருமே அத்வைத மார்க்கத்தை நாடுபவர்கள் அல்லர். அதை உள்ளபடி அறிந்துகொள் கின்றவர்களும் அதற்கேற்ப சாதனங்கள் புரிகின்றவர்களும் மிகச் சிலரேயாம். சாதகர்களுள் பெரும்பான்மையோர் துவைத மார்க்கத்துக்கே தகுதியுடையவராகின்றனர். விசிஷ்டாத்வைதத்துக்கு ஏற்றவர்கள் எண்ணிக்கையில் துவைதிகளுக்கும் அத்வைதிகளுக்கும் இடைநிலையில் இருக் கின்றனர். துவைத மார்க்கத்தையே நாடுகின்ற பெரும் பான்மையோருக்கிடையில் இனியதொரு கொள்கை உண்டு. 'நான் கற்கண்டு ஆக விரும்புவதில்லை, கற்கண்டை அருந்த விரும்புகிறேன்' என்பது அக்கொள்கை. அந்நிலையும் பாராட்டுதற்கு உரியதாம். இம்மூவித சம்ப்ரதாயங்களிலும் சாதகனுக்கு முக்தி உண்டு என்னும் கொள்கையும் சமயங் களில் உறுதிபெற்றிருக்கிறது. துவைத நிலையில் உறுதி பெறுகிற ஆத்மசாதகன் பரமபதத்தில் பரமனுக்கு யாண்டும் தொண்டனாயிருந்து பேரானந்தத்தை அனுபவிக்கிறான். எல்லாவிதமான மனபரிபாகம் அந்நிலையிலும் அவனுக்கு ஏற்படுகிறது. விசிஷ்டாத்வைத நிலையில் முக்தி பெறுகிற வன் உடலில் உறுப்புக்கள் இருப்பதுபோன்று பகவா னுடைய ஓர் அம்சமாக இருந்து ஆனந்தம் துய்க்கிறான். அத்வைதியோ தனது ஜீவ வியக்தியையே பரபோதத்தில்

கரைத்துவிடுகின்றான். பக்தர்களுள் தலையாயவராகத் திகழ்பவர் ஆஞ்சநேயர். யாண்டும் ராமபிரானுக்குத் தொண்டனாய் வாய்த்தவர் அவர். அத்தகைய ஆஞ்சநேயர் ஸ்ரீ ராமனை எவ்வாறு கருதினார் என்று ராமபிரானே அவரிடம் கேள்வியைக் கிளப்பினார். அதற்கு ஆஞ்சநேயர் கொடுத்த விடை அற்புதமானது : " இறைவா, ஸ்ரீ நாதனும் ஜானகி நாதனும் ஒன்று என்பதை நான் அறிகிறேன். என்னிடத்து தேகாத்ம புத்தி இருக்கிறபொழுது நான் ஜானகி நாதனுக்குத் தாசன். என்னிடத்து ஜீவபோதம் மிளிரும் பொழுது ஜானகி நாதனுடைய ஓர் அம்சமாக இருக்கிறேன். பின்பு ஆத்மபோதம் ஓங்குமிடத்து நீயே நான் ; நானே நீ ! இதுவே நான் உம்மோடு கொண்டுள்ள இணக்கம்" என்றார். ஈண்டு துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் ஆகிய மூன்று நிலைகளும் ஒன்றுக்கொன்று நிகரான இடம் பெறுகின்றன. அப்படி அவைகளை அமைத்து வைத்திருப்பது இறைவனுடைய பேரருளாம். இக்கோட்பாட்டை **ஏது பாவித்திடினும் அதுவாகி வந்து அருள்செய் எந்தை நீ குறையும் உண்டோ,** என்கிறார் தாயுமானவர். இக்கருத்துக்கள் யாவும் இப்பாடலில் அடங்கியுள்ளன.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 4

சொல்லான திற்சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில்வைத் தாட்டிஆட்டித்
தொடையினைக் கிள்ளல்போற் சங்கற்பமொன்றில்
தொடுக்குந் தொடுத்தழிக்கும்
பொல்லாத வாதனை எனும் சப்த பூமியிடை
போந்துதலை சுற்றியாடும்
புருஷனி லடங்காத பூவைபோல் தானே
புறம்போந்து சஞ்சரிக்கும்
கல்லோ டிரும்புக்கு மிகவன்மை காட்டிடும்
காணாது கேட்டஎல்லாங்
கண்டதாக் காட்டியே அணுவாச்சுருக்கிடும்
கபடநா டகசாலமோ
எல்லாமும் வலதிந்த மனமாயை ஏழையாம்
என்னு லடக்கவசமோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

மதசம்ப்ரதாயங்களும் கோட்பாடுகளும் கணக்கில் அடங்காதவைகளாம். ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு போக்கில் தனது சம்ப்ரதாயங்களை உலகுக்கு வழங்கிவருகிறது. இம் மதங்கள் அனைத்தும் பொதுவாகப் பிரயோகிக்கும் பதங்கள் சில இருக்கின்றன. கடவுள், அறநெறி, பாரமார்த்திகம், அருள், யோகம், ஞானம் ஆகிய பதங்கள் சர்வசாதாரணமாக எல்லா சம்ப்ரதாயங்களாலும் கையாளப்பட்டு வருகின்றன. ஆனால் இச்சொற்களுக்கு அவைகள் கொடுக்கும் பொருள்கள் ஒன்றையொன்று ஒத்திருப்பது மிக அரிதாம். ஒருவர்

ஒரு சொல்லைப் பயன்படுத்துகிறபொழுது அச்சொல்லுக்கு அவர் என்ன பொருள் கொடுக்கிறார் என்பதை அறிந்து கொள்வது அவசியமாகிறது. பல தடவைகளில் ஒரு சொல்லைப்பற்றி இருவர் விவாதிக்கின்றபொழுது அவர்களுக் கிடையிலுள்ள கருத்து வேற்றுமையை அறிந்துகொள்ளாமலேயே விவாதத்தை வளர்த்துக்கொண்டு போவார்கள். அப்படிச் செய்வது பொருந்தாது. விவாதிக்கும்பொழுது ஒவ்வொரு சொல்லுக்கும் அடிப்படையாக ஒருவர் கொண்டுள்ள கருத்தை முதலில் அறிந்துகொள்வது அவசியமாகிறது. அப்படிச் செய்தால் விவாதம் பொதுவாக இனிது நடைபெற்றுவரும்; இனிய முடிவுக்கும் அது வந்துசேரும்.

பல மதஸ்தர்களால் பலவிதமாகப் பொருள்படுத்தப் படும் சொற்களுள் மாயை என்பது ஒன்று. சில மதஸ்தர்கள் மாயாவாதிகள் என்று ஒதுக்கி வைக்கப்படுகின்றனர். அப்படி ஒதுக்கிவைக்கின்றவர்களுக்கே மாயை என்னும் சொல்லுக்குச் சரியான அர்த்தம் தெரியாதிருக்கிறது. வேதாந்த சாஸ்திரப்படி மாயை என்னும் சொல்லுக்கு அமைந்துள்ள அர்த்தத்தை ஈண்டு இயம்புவோம். மாயா என்னும் சம்ஸ்கிருதச்சொல் மாயை எனத்தமிழில் மருவுகிறது. இயற்கை என்னும் சொல்லுக்கு நிகரானது மாயை. எது ஓயாது இயங்குகிறதோ அது இயற்கை. ஜகத் என்று சொல்லுகிறபொழுதும் இதே கருத்துத்தான் அச்சொல்லில் பொலிகிறது. எது இடையறாது நிலைமாறிப் போய்க்கொண்டிருக் கிறதோ அது ஜகத். கச் என்னும் அடிச்சொல்லிலிருந்து அது வருகிறது. போதல் என்பது அதன் பொருள். மாயா என்னும் சொல்லுக்கு விளக்கம் அச் சொல்லினுள்ளேயே அமைந்திருக்கிறது. சம்ஸ்கிருதத்தில் அது யா மா-ஸா மாயா. யா-எது ஒன்று, மா—ஒரு கணத்துக்கு முன்பு

இருந்தது போன்று ஒரு கணத்துக்குப் பின்பு இருப்ப தில்லேயோ, ஸா-அதுவானது, மாயா-மாயையாம். அதாவது இடையருது எது வடிவம் மாறியமைந்துகொண்டிருக் கிறதோ அது மாயை. பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் ஓயாது வடிவம் மாறியமைந்துகொண்டு வருகின்றன. நவீன பௌதிக விக்ஞானமும் இப்பிரபஞ்சத்தைப்பற்றி இதே முடிவுக்கு வந்திருக்கிறது. ஆக, மாயை, பிரபஞ்சம், ஜகத், இயற்கை ஆகிய இவையாவும் ஒரே பொருளைக் குறிக்கும் பல சொற்களாம். உலகம் மாயை என்று இயம்புமிடத்து உலகம் நிலேபேறுடையதன்று; அது மாறும் தன்மையுடை யது எனப்பொருள்படுகிறது. எந்த சமயவாதியும் இவ் வுண்மையை மறுக்கமுடியாது. மாறியமைகின்ற பிரபஞ்சத் தில் ஸ்தூலசொரூபம், சூட்சும சொரூபமாகிய இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஸ்தூலத்தைவிட சூட்சுமத்துக்கு வலிவு அதிகம். சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். உறைபனிக்கட்டி ஸ்தூலமானது. நீராவி சூட்சுமமானது. வஸ்து ஒன்று எனினும் நீராவிக்கு இருக்கிற வல்லமை உறைபனிக்கட்டிக்கு இல்லே. பிரபஞ்சம் முழுதிலும் சூட்சும மாயிருப்பவைகளுக்கும் அதி சூட்சுமமாயிருப்பவைகளுக்குமே வல்லமை அதிகரித்து வருகிறது. அதிசூட்சுமமானவை களுள் உச்சநிலே பெற்றிருப்பது மனது. இந்த மனதி னிடத்து மற்ருெரு சிறப்பு உண்டு. அதற்கு வேகமும் வலி வும் மிகைபட இருப்பதோடுகூட அறிவு சொரூபமாகவும் அது இலங்குகிறது. அத்தகைய அறிவு அல்லது சேதனம் அதற்குச் சொந்தமானது அல்ல. ஆத்மசொரூபத்துக்கு மிக அண்மையிலிருப்பதால் ஆத்மாவிடத்திருந்து ஏற்றுக் கொண்ட சேதனத்தை தன் சொந்தச் சேதனம் போன்று மனது காட்டி வருகிறது. பிரபஞ்சமுழுதும் மாயை என்ருல்

இந்த மாயைக்குள் ஒப்பற்ற உயர்நிலை யெய்தியிருப்பது மனது. இக்கருத்தை எல்லாமும் வலது இந்த மனமாயை என்கிறார் தாயுமானவர்.

குழந்தையைப் பார்த்துக்கொள்ளுதற்கு தாதி ஒருத்தி நியமிக்கப்பட்டிருக்கிறாள். அக்குழந்தையை முன்னிட்டுத் தனக்கு ஓயாத அலுவல்கள் இருப்பதாகக் காட்டிக் கொள்வது அத் தாதியின் இயல்பு. குழந்தை இங்கும் அங்கும் ஓடுகிறது; அது போகுமிடத்துக்கெல்லாம் பின்தொடர்ந்து செல்ல தாதிக்கு விருப்பமில்லை. ஆதலால் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்து தொட்டிலில் போட்டு ஆட்டுகிறாள். ஓடி விளையாட விரும்புகிற குழந்தை தொட்டிலில் படுத்துக் கிடக்க விரும்புவதில்லை. எனவே அது அழுகிறது. தாதி தாலாட்டுகிறாள். குழந்தைக்குத் தூக்கம் வருகிறது. ஆனால் தாதிக்கோ அதில் சம்மதமில்லை. குழந்தை தூங்கி விட்டால் வீட்டார் தனக்கு வேறு வேலை கொடுப்பார்கள். இருந்த இடத்திலேயே சிரமப்படாது வேலை செய்துகொண்டிருப்ப தாகப் பாசாங்கு பண்ணுவது அவளுக்கு எளிது. ஆதலால் தூங்கப்போம் குழந்தையின் தொடையைக் கிள்ளி அழ வைத்துவிட்டு அவள் தொட்டிலை ஆட்டிக்கொண்டிருக் கிறாள். அவளுடைய வசதியின் பொருட்டு சிறுகுழந்தை ஓடி விளையாடவும் கூடாது; உறங்கவும் கூடாது. மனது செய்கின்ற செயல் அத்தகையது. அதனிடத்து இரண்டு இயல்புகள் இருக்கின்றன. ஒன்று ஆசையினால் தூண்டப் பட்டு ஏதேதோ அற்பச்செயல்களில் ஈடுபடுவது. மற்றோர் இயல்பு அவ்வற்பச் செயல்களினின்று தன்னை விடுவித்துக் கொள்ளுதல் அல்லது அவைகளுக்குத் தக்க காரணங்களை எடுத்துக் காட்டுவது. ஒன்றோடொன்று முரண்படுகிற இவ் இரு இயல்புகள் கிட்டத்தட்ட மக்கள் எல்லாரிடத்திலும்

இருக்கிறது. வலியச் சென்று என்னென்னவோ இன்னல் களைத் தூக்கித் தங்கள் தலையில் போட்டுக்கொள்கின்றனர். பிறகு அவ் இன்னல்களினின்று தங்களை விடுவித்துக் கொள்ளுதல் பொருட்டு வேறு என்னென்னவோ உபாயங் களைக் கையாளுகின்றனர். இதுதான் மானுட வாழ்வு என் பது. இதற்கெல்லாம் மூலகாரணமாயிருப்பது கட்டிலடங் காத மனது. இவ்வுண்மையை சொல்லானதில் சற்றும் வாராத பிள்ளையைத் தொட்டில் வைத்து ஆட்டி ஆட்டி தொடையினைக் கிள்ளல்போல் சங்கல்பம் ஒன்றில் தொடுக்கும் தொடுத்து அழிக்கும் என்கிறார் தாயுமானவர். ஆசையினால் தூண்டப்பட்டு மனதில் எழுகின்ற தீர்மானம் சங்கல்பம் எனப்படுகிறது. இடையறாது எதையெதையோ சங்கல்பித்துக் கொண்டிருப்பது மனதின் இயல்பு. முற்பக லில் செய்த சங்கல்பத்தைத் துடைத்து அழித்துவிட்டு அதற்கு நேர்மாறான சங்கல்பம் ஒன்றைப் பிற்பகலில் செய் வதும் அதே மனதின் போக்கு ஆகும்.

ஆறு சாஸ்திரங்களுள் நியாயம், வைசேஷிகம் ஆகிய இரண்டும் துவக்க நிலையில் இருக்கின்றன. முறையாகப் பேசுதற்கென்றே இவைகள் அமைந்திருக்கின்றன. மனதில் உதிக்கின்ற எண்ணங்கள் பேச்சாக வடிவெடுக்கின்றன. பேச்சில் பொருத்தமில்லாவிட்டால் எண்ணிய எண்ணங்கள் பொருத்தமற்றவைகள் என்பது வெளியாகிறது. ஆதலால் பொருத்தமாகப் பேசிப் பழகுவது வாழ்க்கையில் அல்லது ஞானத்துறையில் முதல்படியாகிறது. அதற்காகவென்றே இந்த இரண்டு சாஸ்திரங்கள் அமைந்திருக்கின்றன. பேச்சுத் திறமையில் கேடு ஒன்று புதைந்திருக்கிறது. பொருந்தாத கொள்கையொன்றை முற்றிலும் பொருத்த மானது என்று யுக்திபூர்வமாக விளக்கிக்காட்டும் வல்லமை

நியாய சாஸ்திரம் கற்றிருக்கிறவனுக்கு வாய்க்கிறது. அதற்கு மாருக, பொருத்தமான கொள்கையொன்றை முற்றிலும் பொருந்தாதது என்று விளக்கிக் காட்டுதற்கும் தர்க்க சாஸ்திரம் பயன்படுகிறது. நெய்யைக் கிண்ணி தாங்கிக் கொண்டிருக்கிறதா, அல்லது கிண்ணியை நெய் தாங்கிக் கொண்டிருக்கிறதா, என்று நாட்கணக்காகப் பேருக்கத்துடன் விவாதிக்க மனது ஊக்கம் பெறுகிறது. அதற்குத் தக்க கருவியாக வாய்த்திருப்பது தர்க்க சாஸ்திரம். ஆனால் அப்படிச் செய்கிற வாய்ப்பேச்சுக்களெல்லாம் மனிதன் அக்ஞானத்திலிருக்கும்பொழுதேயாம். இதை ஓர் அரிய உபமானத்தைக்கொண்டு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் விளக்குகிருர். விருந்து சாப்பிட வந்திருக்கும் பலபேர் என்னென்னவோ விஷயங்களைப் பற்றிப் பேசிக்கொண்டிருக்கின்றனர். சாப்பிட உட்கார்ந்ததும் பேச்சு சிறிதளவு குறைகிறது. உண்டி அதிகரித்துக்கொண்டு போகப் போக அதற்கேற்றவாறு பேச்சு தணிகிறது. கடைசியாக தயிர் சாதம் அருந்தும்பொழுது உஸ் உஸ் என்கிற ஓசை மட்டும் கேட்கிறது. உண்ட பிறகு உறங்கும்பொழுது பேச்செல்லாம் நின்றுவிடுகின்றன. மனிதன் பரம்பொருளை சமாதி நிலையில் காண்பதற்கு முன்பு வாதப்பிரதிவாதங்களை வேண்டியவாறு செய்து கொண்டிருப்பான். அப்படியெல்லாம் பேசுதற்குக் கூத்தாடும் மனது இடந்தருகிறது. இக்கோட்பாட்டை பொல்லாத வாதனை எனும் சப்த பூமியிடை போந்து தலைசுற்றியாடும் என்கிருர் தாயுமானவர். இறைவனுடைய அருளைப் பெறுதற்குப் பயன்படாத புல்லிய பேச்சுக்களை அவர் பொல்லாத வாதனை என்கிருர். ஞானபூமி ஏழு, அக்ஞான பூமி ஏழு எனப் பதினுன்கு படித்தரங்களில் மனிதனுடைய மனநிலையை வைத்து மேலோர்கள் விளக்கிக் காட்டியிருக்கின்

றனர். ஞானபூமி ஏழினுள் புகுமளவு பேச்சு குறைகிறது. அக்ஞான பூமிகளில் புகுமளவு பேச்சும் வாதப்பிரதிவாதமும் விவாதமும் வளர்கின்றன. ஈண்டுத் தாயுமானவர் பகரும் சப்த பூமி அக்ஞான நிலையிலிருக்கும் ஏழு படித்தரங்களைத் தொட்டுக்காட்டுகிறது. காலையிலிருந்து மாலைபரியந்தம் ஒருமனிதன் பேசியதையெல்லாம் கணக்கெடுத்துப் பார்த்தால் பொருளற்ற பேச்சுக்களையே அவன் பெருக்கிக் கொண்டு போகிருன் என்பது புலனுகும். மனது கட்டில் அடங்காது இருப்பதே அத்தனை பேச்சு வார்த்தைகளுக்கும் முதல் காரணமாகும். மிகைபட்ட பேச்சுக்கள் வெறிக்கு ஒப்பானது. வெறி அதிகரிக்குமிடத்துத் தலை சுழல்கிறது. பேச்சு அதிகரிக்கும்பொழுதும் தலை சுற்றியாடுகிறது.

இல்வாழ்க்கைச்கு இனிமை தருவது மணந்துகொண்ட இருவர்க்கிடையில் மன ஒற்றுமை உண்டாவதாம். உடல் இரண்டு, மனது ஒன்று என்பதே இல்வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோள். மன அமைப்பில் எப்பொழுதும் கணவன் மனைவிக்கு மிக்கானுக இருப்பது முறைமை. அவனுடைய மேலான மனதுக்கு முற்றிலும் உடன்பட்டதாக மனைவியின் மனது அமைவது அவசியமாகிறது. அப்பொழுது இருவர் கருத்தும் ஒருமித்துவிடுகிறது. அந்நிலையில் உண்மையான அன்பைக் காணலாம். இல்வாழ்வுக்கு அது நல்ல ஆதரவு ஆகிறது. ஆனல் கணவன் சொல்லுக்குக் கட்டுப்படாத மனைவியையும் உலகில் காணலாம். இருவருக்கிடையில் கருத்து வேற்றுமை உண்டாகுமிடத்து வாழ்வில் ஒவ்வொரு படித்தரத்திலும் இடுக்கண்களே ஓயாது தலையெடுத்துக் கொண்டிருக்கும். ஆத்ம சாதகனுடைய உடல் வாழ்க்கையை இல்வாழ்க்கையோடு ஒப்பிட்டுக் கூறுவது சில சமயங்களின் மரபு ஆகும். ஜீவாத்மன்

கணவனுடைய ஸ்தானத்தை வகிக்கிறுன்; அவன் படைத்துள்ள மனது அவனுக்கு மனைவியாகிறது. மனதானது முற்றிலும் அவனுக்கு வசப்பட்டிருக்குமாகில் அம்மனது கற்புடையது. ஆனல் பெரும்பாலர்க்கு மனது கட்டில் அடங்காதது. அது தன் போக்கில் எங்கேயோ சுற்றியலைந்து திரியும். மனதிடத்துள்ள இவ்வியல்பை புருஷனில் அடங்காத பூவைபோல் தானே புறம்போந்து சஞ்சரிக்கும் என்கிருர் தாயுமானவர். பூவை என்னும் சொல் பெண்ணைக் குறிக்கிறது.

மனதுக்கு நெஞ்சம் என்பது மற்ருெரு பெயர். நல்ல மனதினிடத்து இளகும் தன்மை அமைவது முற்றிலும் அவசியமாம். பரிந்து ஒருவன் ஒன்றை வேண்டும்பொழுது நல்ல மனமுடையவனுக்கு இரக்கம் தானுக வருகிறது. இரக்கமில்லாத மனது கொடியதிலும் கொடியது. கல் நெஞ்சம் படைத்திருப்பதற்குச் சான்ருக அரிச்சந்திர நாடகத்தில் காலகண்டனை எடுத்துக்கொள்ளலாம். அரசியாக இருந்த சந்திரமதி காலகண்டனுக்கு காலகதியை முன்னிட்டு அடிமைப்பெண் ஆனுள். அதே காலகதிக்கு வசப்பட்டு அவள் மகனை இழந்தாள். மகனே காலகண்டனுக்குத் தர்ப்பை கொய்யச் சென்று சர்ப்பத்தால் தீண்டப்பெற்று மடிந்து போனுன். அந்த நெருக்கடியில் மடிந்துபோன மகனுக்கு ஈமச் சடங்குகளைச் செய்வதற்கு சந்திரமதி கையில் காசு ஒன்றும் இல்லை. அவள் அழுது கெஞ்சிக்கேட்டும் காசுகொடுக்க காலகண்டன் இணங்கவில்லை. மயானத்துக்குச் சென்று வருவதற்குப் போதிய அவகாசமும் கொடுக்கவில்லை. சந்திரமதி அழுத அழுகை கல்லையும் கரைக்கும். ஆனல் காலகண்டன் மனது கரையவில்லை. மனதைப் படைத்தவன் மனிதன். இளகும் தன்மை வாய்ந்த மனம்

படைத்தவன் மேலோன். ஆனல் எதற்கும் இணங்காத மனது பலர்க்கு வாய்க்கிறது. அத்தகைய மனதை கல்லோடு இரும்புக்கும் மிக வன்மை காட்டிடும் எனத் தாயுமானவர் கூறுகிருர்.

மக்கள் பேசிக்கொண்டிருப்பதற்கெல்லாம் செவிகொடுத்துக்கொண்டு வந்தால் உண்மையொன்று வெளியாகும். பேச்சுக்குரிய விஷயங்கள் எண்ணிக்கையில் அடங்கா. அத்தனைவித விஷயங்களைப்பற்றி ஆர்வத்தோடு மக்கள் உரையாடி வருகின்றனர். உலகம் என்ன போக்கில் போகிறது, மக்களுக்கிடையில் நல்லார் யார், பொல்லார் யார், எங்கு யாரிடம் ஆக்கம் மேலிட்டிருக்கிறது, மற்று வேறு எங்கு யாரிடம் அழிவு அதிகரித்துக்கொண்டு வருகிறது—இவை போன்ற விஷயங்களைப்பற்றிப் பெருமிதமான பேச்சுக்கள் நிகழ்ந்து வருகின்றன. அப்படிப் பேசுகின்றவர்களில் பெரும்பான்மையோர் தங்கள் சொந்த அனுபவத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு பேசுபவர்களாகத் தென்படுகின்றனர். அன்னவர்களை வளைத்துப் பிடித்து முறுக்கிக்கேட்டால் தாங்கள் கூறிய கூற்றுக்களை நேரில் கண்டறிந்தவர்கள் அல்லர், தக்க ஆதாரத்துடன் கேள்விப்பட்டதைப் பற்றித்தான் தாம் பேசுவதாக ஒத்துக்கொள்வார்கள். ஓராயிரம் பேச்சுகளுக்கிடையில் ஏதோ ஒன்றுதான் சொந்த அனுபவத்தை ஒட்டியதாக இருக்கும். ஏனைய யாவும் ஆதாரமற்ற கேள்வியினின்று அல்லது கற்பனையினின்று உதித்தனவாகும். கேள்விப்பட்டதைத் தாம் நேரில் கண்டதுபோன்று பேசுவது மக்களின் இயல்பு. மனதில் உள்ள தோஷம் அப்படிச் செய்யும்படி மக்களைத் தூண்டுகிறது. இவ்வியல்பை காணுது கேட்டதெல்லாம் கண்டதாக் காட்டியே அணுவாய்ச் சுருக்கிடும் என்கிருர்

தாயுமானவர். இதெல்லாம் எனக்குத் தெரிந்த விஷயந் தானே என்ற முடிவுகட்டுவது அணுவாகச் சுருக்குவதற்கு ஒப்பாகும். கண்டதைவிடக் கேட்டதில் அதிக நம்பிக்கை வைப்பது உலகத்தவர் போக்கு. இதைக் குறித்துக்காட்டு தற்கு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சான்று ஒன்று எடுத் துக்கொள்கிறார். ஒரு மனிதன் ஓரிடத்தில் வீடு ஒன்று தீப்பற்றி எரிந்துபோனதை நேரில் பார்த்துவிட்டு வந்து தனது நண்பர்களிடம் அந்நிகழ்ச்சியைத் தெரிவித்தான். ஆனால் நண்பர்களில் ஒருவன் அந்நிகழ்ச்சியைப்பற்றி சமாசாரப் பத்திரிகை ஒன்றும் வெளியிடவில்லை யாதலால், தான் அதை நம்பமுடியாது என்று மறுத்துவிட்டான். நேரில் கண்டவனுடைய கூற்றை நிராகரித்த அம்மனிதன் சமாசாரப் பத்திரிகையின் மூலம் கேள்விப்படுவதை முற்றிலும் ஏற்றுக் கொள்ள ஆயத்தமாயிருந்தது விபரீத மனப்பான்மைக்கு எடுத்துக் காட்டாகும்.

பிரபஞ்ச வாழ்வு முழுதும் ஒரு நாடகம். ஆனால் இளைஞர்களுக்கு இது நாடகம் என்பது விளங்காது. வயதி லும் அறிவிலும் முதிர்ந்தவர்கள் தங்கள் வாழ்க்கையிலே ஏற்கனவே நிகழ்ந்துபோனவைகளை யெல்லாம் விமர்சனம் செய்து பார்ப்பார்களாகில் வாழ்வு முழுதும் மனதினால் கற்பனை செய்யப்பட்ட நாடகம் என்பதும் ஜாலவித்தை என்பதும் ஒருவாறு விளங்கும். தீர்க்கதரிசிகளோ வாழ் வனைத்தும் மனதினால் கற்பிக்கப்பட்டது என்றும், அது ஒரு ஜாலவித்தை என்றும் நன்கு அறிகின்றனர். உலகத்தவர் சொல்லுவதை யெல்லாம் நாம் கேட்க மறுத்துவிட்டாலும் ஆன்றோர்கள் சொல்லுவதை அப்படியே ஏற்றுக்கொள்வது நமக்கு நலம் தரும். ஆதலால் மனிதன் செயலை கபட **நாடக ஜாலமோ** என்று வினவுகிறார் தாயுமானவர்.

சர்வசக்திமான் என்றும் எல்லாம் வல்லவர் என்றும் கடவுள் போற்றப்படுகிறுர். அது பொருள்சேர்ந்த புகழ். ஏனென்றுல் அவருடைய செயல்கள் அனைத்தும் உலகை ஒழுங்குப்படுத்தி உயர்த்தும் செயலாகிறது. மனிதனுடைய மனது அவனை அல்லல் படுத்துவதில் ஒருவிதத்தில் வல்லமை வாய்ந்ததாகத் தென்படுகிறது. மனிதன் எத்தனை யெத்தனை பிறவிகளை எடுத்திருக்கிறுன்? அதற்கெல்லாம் காரணம் மனது. எத்தனை யெத்தனை துன்பங்களுக்கெல்லாம் அவன் ஆளாயிருந்திருக்கிறுன்? அதற்கெல்லாம் காரணம் மனது. இன்பத்தை நல்குவது போன்று மனிதனுக்கு மையல் ஊட்டி அவனைத் துன்பத்தில் ஆழ்த்தியது மனது. அதன் கொடிய செயல்களை யெல்லாம் ஆராய்ந்து பார்த்த பிறகு எல்லாம் வலது இந்த மனமாயை ஏழையாம் என்னுல் அடக்க வசமோ என்று அதைக் குறித்துத் தாயுமானவர் முறையிட்டிருப்பது முற்றிலும் பொருத்தமானதன்றே? இக்கருத்துக்கள் அனைத்தும் மேலேயுள்ள பாடலில் அடங்கியிருக்கின்றன.



## எங்கும் நிறைகின்ற பொருள் - 5

கண்ணுர நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே ஞனுலுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணு பரஞ்சோதி யப்பா உனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
அகிலமுஞ் சிறிதறியுமேல்
தண்ணுரு நின்னதரு ளறியாத தல்லவே
சற்றேனும் இனிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை ஈதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறென்(று)
எண்ணும லுள்ளபடி சுகமா யிருக்கவே
ஏழையேற் கருள்செய்கண்டாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

*தோன்றியுள்ள உயிர்கள் அனைத்தும் அன்புமயமாய் இலங்குகின்றன. அன்பு அமையப்பெருத உயிர் பிரபஞ்சத்தில் இல்லை. துஷ்டத்தனம் நிறைந்த நரி, புலி முதலியவைகள் தங்கள் குட்டிகளிடம் காட்டும் அன்பு பாராட்டுதற்குரியதாகும். அதே விதத்தில் கொலைபாதகனும் தன் குழந்தையிடம் அன்புமிகக் காட்டுகிருன். இத்தகைய அன்பு மக்களிடத்துப் படிப்படியாக மேல் நிலைக்கு வருகிறது. இந்த அன்பை தெய்வத்திடத்துத் திருப்புங்கால் இது பக்தியென்னும் பெயர் பெறுகிறது. மக்களோடு மக்கள் உறவாடி*

வருதலிலும் மக்கள் தெய்வத்திடம் வைக்கிற அன்பிலும் இரண்டு படித்தரங்கள் இருக்கின்றன. ஒன்று மேற்போக்கானது. சாதாரண உலக வாழ்வுக்கும் உலகத்தவரிடம் வைக்கும் இணக்கத்துக்கும் இந்த மேற்போக்கான அன்பு போதுமானது. கடவுளிடம் வைக்கும் பக்தியோ மேற்போக்கு நிலையைத் தாண்டி மானுட சொரூபம் முழுதையும் தாவிப் பிடிக்கிற பக்தியாக விரிவடையுமாகில் அது கிடைப்பதற்கரிய பேறு ஆகிறது. முக்திபோன்ற முடிந்தநிலை அத்தகைய பேரன்பு படைத்திருக்கும் ஆத்ம சாதகனுக்கு விளையாட்டாக வாய்ப்பதாகிறது. ஆத்ம சாதகர்களிடத்துத் தென்படுகிற சாதாரண பக்தி கௌணீபக்தி எனப்படுகிறது. முதிர்ந்த பேரன்போ பராபக்தி எனப்படுகிறது. பராபக்தி எல்லார்க்கும் வாய்ப்பதன்று. அதை அடையப் பெறுபவர் பாக்கியவான்களே. தமக்குப் பராபக்தி இன்னும் வாய்க்கவில்லை என்பதை **கண்ணுர நீர்மல்கி உள்ளம் நெக்குருகாத கள்ளனேன் நான் ஆனுலும்** எனத் தாயுமானவர் இயம்புகிருர்.

அன்பானது தன்னை உடன்பாட்டு முறையில் விளக்குவது போன்று எதிர்மறை முறையிலும் விளக்குகிறது. உயிரோடு இருப்பவர்களிடத்து பணிவிடை செய்தல் மூலம் அன்பு தன்னை விளக்கிக்கொள்கிறது. மாண்டுபோனவர்களைக் குறித்து வருந்தியழுதல் மூலம் எதிர்மறையாக அன்பு தன்னை விளக்கிக்கொள்கிறது. செத்துப்போனவர்களைச் சூழ்ந்துகொண்டு உற்ருர் உறவினர் வருந்தியழுவது வழக்கம். அப்படி அவர்கள் அழுவதில் பலபடித்தரங்களைக் காணலாம். கூலிக்கு மாரடித்து அழும் கூட்டம் ஒன்று உண்டு. உள்ளத்தினுள் உருக்கம் சிறிதேனும் அன்னவர்களுக்கு இல்லை. ஆனுல் அழுபவர் போன்று புறத்தில் காட்டிக்கொள்வார்கள்.

பயிற்சியால் அத்தகையவர்கள் கண்ணீர் சிந்துவதும் உண்டு. தங்கள் மனதை உணர்ச்சியானது தொட்டும் தொடாமலும் இருக்கிற முறையில் அழுபவர்களைக் காண லாம். இதற்குமேல் உள்ளம் முழுதும் உருகி கதறிப் பதறி அழுபவர்கள் இருக்கின்றனர். அன்பின் ஆழத்திற்கேற்ற வாறு துயரமும் இப்படிப் பல படித்தரங்களில் வெளியா கிறது. கடவுள் பக்தியும் இப்படிப்பட்டது. பழக்கத்தால் பக்தி நிறைந்திருப்பதுபோன்று புறக்காட்சியளிக்கிறது. அப் புறக்காட்சியை கைகுவித்து ஆடியும் பாடியும் விடா மலே கண்பனித்தாரை காட்டி அண்ணு பரஞ்சோதி அப்பா உனக்கடிமை யான் எனவும் மேலெழுந்த அன் பாகி நாடகம் நடித்ததோ குறைவில்லை எனத் தாயுமான வர் படம் பிடித்துக் காட்டுகிறுர். உலகிலே பக்தர்களாக இலங்குபவர்கள் மிகச் சிலர். அச் சிலரிடம் ஈண்டு விளக்கப் பட்டிருப்பது போன்ற மேற்போக்கான பக்திதான் அமையப் பெறுவதாகிறது. நாடகத்தில் அழுபவனுக நடிப்பவன் நாட கத்திறமையைக் காட்டுகிறுன். ஆனல் உண்மையில் அவன் அழுவதில்லை. மற்றவர்களைக் குறித்து அவன் சொரிகிற அடைமொழிகளெல்லாம் பொருள் சேர்ந்தவைகள் அன்று. வெறும் சொல்லழகோடு அவைகள் நின்றுவிடுகின்றன. கௌணீ பக்தியில் ஊறியிருப்பவர்கள் கடவுளைக் குறித்துக் கண்ணீர் சிந்துவதும் ஆடுவதும் பாடுவதும் புகழ்ந்து பேசு வதும் பரிந்து விண்ணப்பிப்பதும் உள்ளத்தின் மேற் பரப்பி லேயே நின்றுவிடுகிறது. ஆழ்ந்து அடிப்பகுதியை அது சென்று தாக்குவதில்லை. ஆகையினுல்தான் தமது பக்தியை நாடகத்தில் நடிப்பதோடு அண்ணல் ஒப்பிடுகிறுர்.

கடவுளைக்குறித்து மேற்போக்காக பக்தி பண்ணுவதும் பாராட்டுதற்குரிய பெருஞ்செயலாகும். ஏனென்றுல் அத்

தகைய சாமானியமான கௌணீ பக்தி பண்ணுபவர்களையும் உலகில் எளிதில் காணமுடியாது. அந்த சாமானிய பக்திக் கேற்ற நன்மையும் பக்தன் ஒருவனுக்கு நிச்சயமாகவே வாய்க்கிறது. ஆதலால்தான் வெளிவேஷத்துக்கு பக்தி பண்ணுவதையும் சான்றோர்கள் பாராட்டுகின்றனர். மடிந்து போனவர்களைக் குறித்து மிக மிக வருந்துபவர்கள் பேச முடியாது ஸ்தம்பித்துப் போய்விடுவதுண்டு. ஆரவாரம் எதுவும் அவர்களிடத்திருந்து வெளியாவதில்லை. பாசாங் குக்கு அழுபவர்களோ பெருங்கூச்சலிடுவர்; தலையிலும் மார் பிலும் அடித்துக்கொள்வர். அக்காட்சி பார்க்கின்றவர் களுக்குக் கண்கூடாக விளங்குகின்றது. அதே விதத்தில் சாதாரண பக்தி பண்ணுகிறவர்களுடைய ஆடல்களும் பாடல்களும் பரிந்து செய்கின்ற பிரார்த்தனைகளும் உலகத் தவர்களுடைய பார்வைக்கு இலக்காகின்றன. இவ்வுண் மையை அகிலமும் சிறிது அறியும் என்கிறார் தாயுமானவர். அதாவது தாம் பயின்று வருகிற சாதாரண பக்தியை உல கத்தவர்களும் ஏகதேசம் அறிந்திருக்கிறார்கள்.

இறைவனுடைய இயல்பு எத்தகையது என்பதைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஓர் அருமையான உப மானத்தைக்கொண்டு விளக்குகிறார். எறும்பு ஒன்று ஊர்ந்து செல்வதால் உண்டாகிற நுண்ணிய சப்தமும் இறை வன் காதுக்கு எட்டுகிறது. அத்தகைய இறைவனிடம் கூப் பாடு போட்டு பிரார்த்தனை பண்ணவேண்டும் என்பது அவ சியமல்ல. சாதகர்கள் உள்ளத்தில் எழுகிற உணர்வை உள்ளவாறு இறைவன் உணர்கிறார். வாலறிவனாகிய அவ ரிடமிருந்து மறைந்திருக்கிற செயலோ, உணர்வோ எதுவும் இல்லை. அனைத்தையும் முற்ற உணர்பவர் அவர். இக் கோட்பாட்டை மேல் தண் ஆரும் நின்னது அருள் அறி

யாதது அல்லவே எனத் தாயுமானவர் தெரிவித்துக்கொள் கிருர். தண் ஆர் என்பது இனிமை நிறைந்த எனப் பொருள்படுகிறது.

செல்வத்தை வைத்துப் பயன்படுத்தத் தெரியாதவர் களிடம் செல்வம் நிறைந்திருப்பதைக் கண்கூடாகக் காண் கிறேம். பதவியொன்றை வகிப்பதற்குத் தகுதியற்றவனுக் குப் பதவி வாய்ப்பதையும் பார்க்கிறேம். ஆக, தகுதிக் கேற்றவாறே வாய்ப்புகள் அமைகின்றன என்பது சிறிதே னும் முறைபிறழாது நிகழ்கின்ற நியதியன்று. மக்கள் சில ருக்குச் சலுகைகாட்டி உதவி புரிபவர்கள் இருக்கின்றனர். இக்கோட்பாடு ஆத்ம சாதகனுக்கும் பொருந்துவதாகிறது. சாதகன் ஒருவன் தனக்கு இயன்றவரை சாதனங்களைப் புரி கின்ருன். அதற்குமேல் இறைவனுடைய அருளையும் அவன் நாடி நிற்கின்ருன். தனது முயற்சிக்குமேல் ஈசனுடைய அருள் அவனை உயர்நிலைக்கு எடுப்பதுண்டு. அதன் பொருட்டு சாதகன் இறைவனிடத்துப் பரிந்து பிரார்த்திக் கின்ருன். அத்தகைய நிலையில் தாயுமானவர் தம்மையும் வைத்துக்கொண்டு,சற்றேனும் இனிது இரங்கி என விண் ணப்பிக்கின்ருர். தமது முயற்சி போதவில்லை ; இறைவ னுடைய அருளும் சேர்ந்து தம்மை உயர்நிலைக்கு எடுத்துதவ வேண்டும் என்பது அதன் தாற்பரியம்.

அருள் சுரக்க ஈசன் திருவுளம் கொள்ளும்பொழுது அவர் அவ்வருளை பக்தனுக்கு எங்ஙனம் நல்குகிருர் என்பது கேள்வி. ஈசனே உண்மையில் கல்பதரு. அவரிடமிருந்து வேண்டியதை வேண்டியவாறு பெறலாம். பரிபக்குவமடை யாத அறிவிலிகள் நிலையற்ற உலக சம்பத்துக்களை இறைவ னிடமிருந்து வேண்டுகின்றனர். அப்படி வேண்டியதை அவர்கள் அடையப்பெறுபவர் ஆகின்றனர். ஆனல் நிலையற்ற

வைகள் ஈசனிடமிருந்து வருவதால் நிலையுற்றவைகள் ஆக மாட்டா. காலாந்தரத்தில் அவைகள் கை நழுவிப்போவது திண்ணம். அதலால் அறிவுடையோர் அநித்தியப்பொருள் களை இறைவனிடமிருந்து கேட்பதில்லை. இறைவனிடம் அவர்கள் எதைக் கேட்கிறார்களோ அதிலிருந்து அவர் களுடைய மனபரிபாகம் எத்தகையதென்பது வெளியா கிறது. சாசுவத முக்திநிலை ஈதென்று உணர்த்தி என்று தமது வேண்டுதலின் முதற்பகுதியைத் தாயுமானவர் வெளி யிடுகிறார்.

மனிதன் பெறுகிற உறுதிப்பொருள்கள் அறம் பொருள் இன்பம் வீடு எனப் பாகுபடுத்தப்பட்டுள்ளன. அந்த நான்கி னுள் வீடுபேறு ஒன்றே ஒப்பு உயர்வு அற்றது. ஏனைய மூன் றும் அழியும் தன்மையுடையவைகள். மற்று வீடுபேறே என் றென்றும் நிலைத்திருப்பது. ஆதலால் அது சாசுவத முக்தி நிலை என மொழியப்படுகிறது. பக்குவமடையாத ஆத்மாக் களுக்கு அப்பேறு இன்னதென்றே விளங்குவதில்லை. ஆத லால்தான் அவர்கள் அதை நாடுவதுமில்லை. அதன் அரு மையைத் தமக்கு முதலில் எடுத்து விளக்கிக் காட்ட வேண் டும் என்று அண்ணல் விண்ணப்பிக்கின்றார். அவர் போன்ற சான்றோர்களுக்கே சாசுவத முக்திநிலை தெளிவுற விளங்குவ தில்லை யென்றால் சாமான்ய ஆத்மாக்களைப்பற்றி பின்பு பேசுவானேன்? அதன் அருமையை உள்ளபடி அறிகின்றவர் களே அதை உள்ளன்போடு நாடுகின்றனர். முக்திக்குப் பக்குவமாயிருக்கின்ற ஆத்மா அதற்கு நிகரான மற்றொரு பேற்றினை முதலில் இறைவனுடைய அருளால் பெறுகிறது. அப்பேறுஅதனை சகச நிலை தந்து எனத் தாயுமானவர் கூறுகிறார். இது ஸகஜ சமாதி எனவும் மொழியப்படு கிறது. ஸகஜ என்னும் வடமொழி உடன் பிறந்த எனப்

பொருள்படுகிறது. சாதனத்தில் பெரிதும் பக்குவப்பட்டிருக்கும் ஆத்மாவுக்கு சகஜநிலை அல்லது சகஜசமாதி கூடுகிறது. உடல் வாழ்வு நிலைத்திருக்கும் வரையில் அந்த சகஜநிலையில் சாதகன் இருந்துவருகிறான். சகஜசமாதி எத்தகையது என்னும் கேள்வியை ஒருவர் ஒரு தடவை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் கிளப்பினர். அவர் அதற்குப் பொருத்தமாக விளக்கம் கொடுத்தார். நிலத்தில் துள்ளிக் குதித்துத் திணறிக்கொண்டிருக்கிற மீன் ஒன்றை நீரினுள் எடுத்துவிட்டால் அது அடைந்துள்ள நிலைக்கு ஒப்பானது சகஜநிலை. நீருடன் கூடிப்பிறந்தது மீன். அது நீரினுள்ளேயே வாழ்ந்திருக்கிறது. ஆதலால் அது நீர் வாழும் ஜந்து எனப்படுகிறது. அதன் ஆனந்தம் நீரோடு இணைக்கப்பட்டிருக்கிறது. இங்குமங்கும் நீந்தி விளையாடுதற்கிடையிலும் உணவு தேடுதற்கிடையிலும் அது நீரினுள்ளேயே நிலைத்திருக்கிறது. நீரைவிட்டுப் பிரிப்பதும் அதை மாய்ப்பதும் ஒன்றும். அதே விதத்தில் உயிரானது உண்மையில் ஆத்மசொரூபம். தான் ஆத்மசொரூபம் என்பதை சாதகன் ஒருவன் சரியாக அறிந்துகொள்வானகில் அவனுக்கு சகஜநிலை வாய்க்கிறது. பிராரப்தத்துக்கு ஏற்ப ஏதேதோ வினைகளை அவன் செய்துமுடிக்கிறான்; உலகுக்குக் கைங்கரியங்கள் புரிகின்றான்; உலகோடு வெவ்வேறு விதங்களில் இணக்கம் கொள்கிறான். பந்தத்திலிருக்கும் மற்ற உயிர்கள் போன்று பாடுபடுகிறான். அத்தனை செயல்களுக்கிடையில் தான் ஆத்ம சொரூபம் என்பதை அவன் கணப்பொழுதேனும் மறப்பதில்லை. மீனனது யாண்டும் நீரோடு சம்பந்தப்பட்டிருப்பது போன்று சரியான ஜீவன் முக்தன் தனது நிஜசொரூபத்தோடு யாண்டும் சம்பந்தப்பட்டவனயிருக்கிறான்.

புறச் செயல்களில் சகஜ நிலையில் இருப்பவனுக்கும் உலக பந்தத்தில் இருப்பவனுக்கும் இடையில் வேற்றுமை

காண்பது அரிது. ஒருவன் செய்கிற செயல் அத்தனையும் மற்றவனும் செய்கிறுன். ஆனால் இவ் இருவருக்குமிடையில் மனப்பான்மையில் வேற்றுமை மிக உண்டு. உலக பந்தத்தில் இருப்பவன் எதையெதையோ ஓயாது எண்ணிக்கொண்டிருக்கின்றுன். ஓர் எண்ணத்துக்கும் மற்றோர் எண்ணத்துக்கும் தொடர்வு இருப்பதில்லை. சிதறடைந்துள்ள மனதின் இயல்பு அத்தகையது. ஆனால் சகஜநிலையில் இருப்பவனுடைய எண்ணங்களெல்லாம் முற்றிலும் இறைவனோடு சம்பந்தப்பட்டவைகளாம். காந்தம் தீட்டிய ஊசியானது சர்வகாலமும் வடதிசையையே நோக்கியிருப்பது போன்று சகஜ நிலையில் இருப்பவனுடைய எண்ணங்கள் யாண்டும் இறைவனைப்பற்றியவைகளாம். இனி, இறைவனே பேரானந்த சொரூபி. சூரியனிடத்து இருளுக்கு இடமில்லை. அதேவிதத்தில் இறைவனுடைய சாந்நித்தியத்தில் துன்பத்துக்கு இடமில்லை. உலகக்காட்சியில் பொருந்திய செயல்கள் எனவும் பொருந்தாத செயல்கள் எனவும் பொருள் படுத்தப் படுபவைகளெல்லாம் இறைவனோடு இணைக்கப் படும்போது இன்பம் நிறைந்தவைகள் ஆய்விடுகின்றன. இறைவனிடத்திருந்து தன் செயல்களைப் பிரித்துணர்ந்த அர்ஜுனனுக்கு பாட்டனுரையும் ஆச்சாரியரையும் எதிர்த்துப் போர்புரிவது துன்பம் நிறைந்த செயலாகத் தென்பட்டது. ஆனால் தன் செயல் என்பது எதுவுமில்லை. எல்லாம் ஈசன் செயல் என்பதை அர்ஜுனன் உணர்ந்தான பிறகு பீஷ்மரை எதிர்த்துப் போர்புரிவதே அவனுக்கு இன்பம் நிறைந்த செயலாக விளங்கிற்று. இப்படி சகஜ நிலையில் இருப்பவன் எண்ணமெல்லாம் இறைவனோடு சம்பந்தப்பட்டவைகள் ஆய்விடுவதால் அவன் ஆனந்த நிலையிலேயே இருந்துவருகிறுன். உலகத்தவனுக்கும் சகஜ

நிலையில் இருப்பவனுக்கும் உள்ள வித்தியாசம் இதுவாம். இக்கோட்பாட்டை வேறு ஒன்று எண்ணுமல் உள்ளபடி சுகமாய் இருக்கவே என்கிறுர் தாயுமானவர்.

இறைவனிடம் கேட்கின்ற வரங்களுள் இரண்டுவித மானவைகள் உள. ஒன்று உலகை ஒட்டியது ; மற்றது இறைவனை ஒட்டியது. உலகை யொட்டிய வரம் இன்பமா கத் துவக்கித் துன்பமாக முடிகிறது. இறைவனை யொட்டிய வரமோ ஆதியோடந்தம் சுக சொரூபமானது. அத்தகைய பேரானந்த நிலையையே தமக்கு நல்க வேண்டும் என்று ஏழை யேற்கு அருள்செய் கண்டாய் எனத் தாயுமானவர் விண் ணப்பிக்கிறுர். இக்கருத்துக்கள் அடங்கியபாடல் இது.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 6

காகமா னவைகோடி கூடிநின் ருலுமொரு
கல்லின்முன் னெதிர்நிற்குமோ
கர்மமா னவைகோடி முன்னேசெய் தாலுநின்
கருணைப்ர வாகஅருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ
தமியனேற் கருள்தாகமோ
சற்றுமில்லை என்பதுவும் வெளியாச்சு வினையெலாஞ்
சங்கேத மாய்க்கூடியே
தேகமா னதைமிகவும் வாட்டுதே துன்பங்கள்
சேராமல் யோகமார்க்க
சித்தியோ வரவில்லை சகசநிட் டைக்கும்என்
சிந்தைக்கும் வெகுதூரம்நான்
ஏகமாய் நின்னே டிருக்குநா ளெந்தநாள்
இந்நாளில் முற்றுருதோ
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

உயிர் உற்றவைகள், உயிர் அற்றவைகள் ஆக உலகில் இருப்பவைகளெல்லாம் தென்படுகின்றன. அவைகளைப் பற்றிய உண்மை ஒன்று உண்டு. அவைகளுள் ஏதேனும் ஒன்றை முற்றிலுமே நலம் வாய்ந்தது என்ருே கேடுவாய்ந்தது என்ருே கூறமுடியாது. உயிர் வாழ்வன, உயிர் இல்லாதன ஆகிய அனைத்திடத்தும் நலம் கேடு ஆகிய இரண்டும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. சந்தர்ப்பத்துக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப அவைகளை நலம் நிறைந்தவைகள் என்ருே கேடு கலந்தவைகள் என்ருே இயம்புகிருேம். உயிர் வாழ்பவை

களுள் காகத்தைச் சான்ருக எடுத்துக்கொள்வோம். எங்கெல்லாம் மக்கள் வாழ்ந்திருக்கிருர்களோ, அங்கெல்லாம் காகங்கள் குடியிருப்பதையும் காண்கிரேம். மக்கள் இல்லாத இடங்களில் அவைகள் வசித்திருப்பதில்லை. அங்ஙனம் மக்கட் கூட்டத்துக்கு அக்கம்பக்கத்தில் வாழ்ந்து வருகிற காகங்கள் மக்களுக்கு நலம் புரிகின்றனவா அல்லதுகேடு புரிகின்றனவா என்பது கேள்வி. ஒருவிதத்தில் அவைகள் பெருநலன் புரிந்து வருகின்றன. தோட்டித்தொழிலை மக்கள் நலத்துக்காகஅவைகள் செய்து வருகின்றன. மனிதனல் புறக்கணிக்கப்படுகின்ற அழுகிய பதார்த்தங்கள், தள்ளுபடியான உணவு வகைகள் ஆகியவைகளை அருந்தி மனிதனுடைய வாசஸ்தலத்தை சுத்தப்படுத்துதல் என்னும் அரிய செயலைக் காகங்கள் செய்து வருகின்றன. அதன்பொருட்டு மனிதன் அப்பறவைகளுக்கு நன்றிபாராட்டக் கடமைப் பட்டிருக்கிருன். மற்ரெருவிதத்தில் மானுட வாழ்வுக்கு இடைஞ்சலாகக் காகங்கள் இருக்கின்றன. காயப் போட்டிருக்கும் தானியங்களையெல்லாம் அவைகள் தந்திரமாகத் திருடிக்கொண்டு போகக் கூடியவைகள். பூமியில் விளைந்திருக்கும் தானிய வகைகளைக் கொத்தி யெடுத்து மனிதனுக்கு நஷ்டத்தை உண்டு பண்ணுபவைகளும் அதே காகங்கள்தான். ஆக, அவைகள் மனிதனுக்கு ஒரு பக்கத்தில் நலனையும் மற்ரெரு பக்கத்தில் நஷ்டத்தையும் உண்டுபண்ணி வருகின்றன. இனி, அக்காகங்களின் தனி யியல்பு ஒன்று இருக்கிறது. ஆடு மாடுகள் பயிர் பச்சைகளைத் தின்னவரும் பொழுது ஒன்றை ஓட்டும்பொழுது மற்ரென்று விரைந்து செடிகொடிகளைக் கடித்து நஷ்டப்படுத்தி விடுகிறது. அவையாவையும் சேர்ந்தாற்போன்று விரட்டியோட்டுவது கடினம். காக்கைக் கூட்டத்தின் போக்கு அத்தகையது அன்று. கழனி நிறையக்

காகங்கள் வந்து உட்காரலாம். அவைகளை விரட்டி யோட்டு வதற்கு ஒரு கல்லை விட்டெறிந்தால் போதுமானது. அக் கணமே அவை யாவும் பறந்தோடி விடுகின்றன. அவை களின் செயலை காகமானவை கோடி கூடி நின்ருலும் ஒரு கல்லின் முன் எதிர் நிற்குமோ? என்கிருர் தாயு மானவர்.

கர்மத்தினுடைய இயல்பும் இயற்கையிலுள்ள மற்ற பொருள்களின் இயல்பை ஒத்திருக்கிறது. கர்மத்தைப் பொதுவாக நாம் நல்வினை தீவினையென இரண்டாகப் பிரிக்கிருேம். ஆனல் அவைகளைச் சரியாக ஆராய்ந்து பார்க்குமிடத்து சத்கர்மம் துஷ் கர்மம் என இரண்டு கர்மங் கள் இல்லை. கர்மம் என்பது ஒன்றுதான் உள்ளது. அதைச் செய்யும் காலதேச நிமித்தத்தை அனுசரித்து அது புண்ணிய கர்மம் அல்லது பாபகர்மம் ஆகிறது. பொதுப்பட கடவுள் வழிபாட்டை புண்ணிய கர்மம் என்றே சொல்லு கிருேம். ஆனல் எப்பொழுதுமே அது புண்ணிய கர்மமாயிருப் பதில்லை. தனக்கு ஒவ்வாத மனிதன் ஒருவன் ஒழிந்துபட்டுப் போகவேண்டுமென்று உள்ளம் உருகி ஒருவன் தெய்வத் திடத்து விண்ணப்பிக்கிருன்; பரிந்து போற்றுகிருன்; விநயத்துடன் வழுத்துகிருன். வெளித் தோற்றத்துக்கு அது கடவுள் வழிபாடு என்னும் புண்ணிய கர்மமாகத் தென்படு கிறது. ஆனல் அம்மனிதனுடைய மனப்பான்மையை அனு சரித்து அது பாபகர்மமாகிறது. கொலை, களவு போன்ற செயல்களைப் பொல்லாத தீவினைகள் என்கிருேம். ஆனல் லோபி ஒருவனிடமிருக்கும் பொருள்களை ஒருவன் களவாடி பலப்பல நல்ல காரியங்களுக்குப் பயன்படுத்துகிருன். உல கத்தவர்களை துஷ்டர்கள் ஓயாது துன்புறுத்தி வருகின்றனர். அத்தகைய துஷ்டர்களை மற்ருெருவன் இரகசியமாக மாய்த்து

விடுகிறுன். இத்தகைய களவிலும் கொலையிலும் தீமையை விட நலமே அதிகம் நிறைந்திருக்கிறது. இப்படி உயிர் களினுடைய வாழ்வை உருவாக்கி வருகின்ற வினைகள் அனைத் திலும் நலமும் கேடும் இணைபிரியாதிருந்து வருகின்றன. வினையினின்று விடுபடுதற்கு விவேகிகள் முயன்று வருகின்ற னர். ஆனல் அவர்களுக்கு விடுதலை கிடைப்பதில்லை. ஒரு வினையை ஒழிப்பதற்கு முன்பு ஒன்பது வேறு வினைகள் முன் வந்து நிற்கின்றன. கடலில் அலைகள் ஓயாது தோன்றிக் கொண்டிருப்பது போன்று மனிதனுடைய வினைகளுக்கும் வினைப்பயன்களுக்கும் முடிவே யில்லை. ஆடுமாடுகளை விரட்டி யோட்ட முயலும்பொழுது ஒன்றை வெளிப்படுத்துகிறேம். அதற்குள்ளாக வேறுபல கால்நடைகள் உட்புகுந்து தொந் தரை செய்கின்றன. அத்தகைய கால்நடைகள் போன்றே கர்மங்களும் இருந்து வருகின்றன. கால்நடைகள் போன் றிருக்கிற கர்மங்களைக் காகங்கள் போன்ற கர்மங்களாக மாற்றியமைப்பதற்கு உற்ற உபாயம் ஒன்றே இருக்கிறது. அந்த உபாயத்தை மற்றோர் உபமானத்தைக் கொண்டு விளக்கலாம். ஓர் அறைக்குள் பல்லாண்டுகளாக இருள் சூழ்ந்திருக்கிறது. அந்த இருளை அகற்றுதற்குப் பல்லாண்டு கள் எடுத்துக்கொள்ளவேண்டிய அவசியம் இல்லை. அறைக் குள் தீபத்தைக் கொண்டுவந்தவுடனே இருள் இருக்குமிடம் தெரியாது மறைந்துபோகிறது. அந்த தீபத்துக்கு நிகர் இறைவனுடைய கருணை. அவருடைய கருணையை வருவிப் பதற்கு உபாயம் அருள் தாகம். அருள் தாகமோ பெறுதற் கரியது. மனிதன் எதை வேண்டுமென்றுலும் எளிதிலோ அல்லது சிரமப்பட்டோ பெற்றுவிடலாம். அவன் பெறு பவைகளுள் அரிதிலும் அரிதாயிருப்பது அருள்தாகம். அதன் அருமையைக் குறித்து ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தமது

உள்ளத்தினிடம் முறையிடும் விதத்தில் இங்ஙனம் பகர்கிருர்: "மனதே நீ பொருளுக்காகவும், போகத்துக்காகவும், பதவிக்காகவும், புகழுக்காகவும் குடம் குடமாகக் கண்ணீர் சிந்துகின்ருய். அல்லும் பகலும் படாதபாடு படுகின்ருய். அப்படி நீ பாடுபட்டுப் பெறுவதெல்லாம் மீண்டும் அழிந்து பட்டுப்போகின்றன. கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமாக வேண்டுமென்று நீ ஒரு சொட்டுக் கண்ணீர் சிந்தியதுண்டா? கடவுளை நாடிச் சிந்துகின்ற கண்ணீர் கர்மத்தையெல்லாம் கழுவிக்கொண்டு போய்விடுகிறது. ஆனல் கடவுளின் கருணையில் நாட்டம் வைத்து நீ இன்னும் கண்ணீர் சிந்தக் கற்றுக்கொள்ளவில்லையே?" இப்படி அவர் பகர்ந்ததுதான் நமது கல்நெஞ்சத்தைப்பற்றிய உண்மை. ஆனல் எப்பொழுதாவது ஏது காரணத்தை முன்னிட்டாவது நமக்கு அருள் தாகம் எடுத்துவிடுமாகில் அக்கணத்திலேயே நம்மைப் பிடித்து வாட்டுகின்ற கோடிக்கணக்கான கர்மங்களை விரட்டியோட்டிவிடலாம். இது வாழ்க்கையைப் பற்றிய பேருண்மை ஒன்று ஆகும். இவ்வுண்மையை **கர்மமானவை கோடி முன்னே செய்தாலும் நின் கருணைப் பிரவாக அருளைத் தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ?** என்கிருர் தாயுமானவர். பிரவாகம் என்பது நீர்ப்பெருக்கு. அளவில் அடங்கியிருக்கிற நீரை நாம் எப்படி வேண்டுமென்ருலும் கையாளலாம். அளவுக்கு மிஞ்சி நீர் பெருக்கெடுத்து ஓடி வரும்பொழுது அது அணையை உடைத்துக்கொண்டு நாலா பக்கமும் பரவியோடுகிறது. அதேவிதத்தில் வினைத்தளைகளையெல்லாம் உடைத்துத் தகர்த்துத் தள்ளவல்லது இறைவனுடைய கருணை என்னும் பிரவாகம்.

செத்தவர் ஒருவரைக் குறித்து ஆங்குக் கூடியிருப்பவர்களெல்லாம் துன்புறுகின்றனர். அவர்களுக்கிடையில் உலக

வழக்கையொட்டித் துன்புறுபவர் யார், உண்மையாகவே உள்ளம் நைந்துருகித் துன்புறுபவர் யார் என்னும் பாகுபாடு சொல்லாமலேயே விளங்கிவிடும். அருள் தாகத்தைப் பற்றிய கோட்பாடு அது போன்றது. கடவுள் வழிபாடு செய்பவர் களுள் பெரும்பான்மையோர் நல்லாருடைய பழக்கவழக்கங் களைப் பின்பற்றி வழிபாடு செய்பவர்களாக இருக்கின்றனர். கிடைப்பதற்கு அரியது மானுடப் பிறவி. அதன் ஆயுள் எவ்வளவு காலத்துக்கு நிலைத்திருக்கும் என்பது யாருக்கும் தெரியாது. கழிந்து போகிற ஒவ்வொரு நாளும் வீணுய்ப் போவதாகிறது. இப்படியெல்லாம் உணர்ந்து இறைவனு டைய அருளை நாடி பித்தம் பிடித்தவர்கள் போன்று பதைத் திருப்பவர்களைக் காண்பது அரிதிலும் அரிது. தமக்கு அத் தகைய ஆர்வம் இன்னும் வாய்க்கவில்லை யென்பதை தமிய னேற்கு அருள்தாகமோ சற்றுமிலை என்பதுவும் வெளி யாச்சு எனத் தாயுமானவர் சந்தேகத்துக்கு இடமில்லாது சொல்லிவிடுகிருர்.

சாகுபடிக்கேற்ற விளைவு தரக்கூடிய நிலம் இருக்கிறது. அதேவிதத்தில் மனிதனுக்கு வினைப்பயன் என்னும் விளைவை உண்டுபண்ணக்கூடியதாய் இருப்பது தேகம். மனிதன் வினைப்பயனுக் கேற்றபடி தேகத்தை யெடுக்கிருன். பிறகு அத்தேகத்தைக் கொண்டே தனது பிராரப்த கர்மங்களை யெல்லாம் அனுபவிக்கிருன். ஒரு உபமானத்தைக்கொண்டு இக்கருத்தை ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் தெரிவிக்கிருர். குடியிருக்கும் வீட்டுக்கு வாடகை கொடுத்தாகவேண்டும். அதேவிதத்தில் குடியிருப்பதற்கு உடலை யெடுத்திருக்கிற வர்கள் நோய்வாய்ப்படுதல், துன்பப்படுதல் முதலிய குடிக் கூலியை அதற்குக் கொடுத்தாக வேண்டும் என்று பகர்ந் துள்ளார். அந்நிபந்தனையினின்று யாரும் தப்பித்துக்

கொள்ள முடியாது. கடலில் அலையெழுவது போன்று உடலிலே பிணிகள் பல ஒன்றுசேர்ந்தும் தனித்தனியாகவும் தோன்றிக் கொண்டேயிருக்கும். அப்பிணிகளுக்கெல்லாம் மனிதன் உட்பட்டேயாகவேண்டும். இக்கோட்பாட்டை, **வினையெல்லாம் சங்கேதமாய்க் கூடியே தேகமானதை மிகவும் வாட்டுதே** என்கிறார் அண்ணல். கட்டுப்பாடோடிருந்து தங்கள் நிபந்தனைப்படி கூலியாட்கள் தங்களுக்குரிய கூலியைப் பெறுகின்றனர். பழவினைகளும் அங்ஙனம் கட்டுப்பாடோடிருந்து தமது ஆதிக்கத்தைச் செலுத்துவதை சங்கேதமாய்க் கூடியே என அவர் பகர்ந்திருக்கிறார்.

உடலையெடுத்திருப்பவர்களுக்கு ஓயாது தோன்றிக் கொண்டிருக்கிற பிணியின் துன்பங்களினின்று தப்பித்துக் கொள்ளுதற்கு வழியொன்றுமில்லையா என்னும் கேள்வி பிறக்கிறது. துன்பத்தினின்று தப்பித்துக்கொள்ள வழியொன்று உண்டு. ஆனால் அது எல்லோருக்கும் சாத்தியமாவதில்லை. யாருக்கு சாத்தியமாகிறது என்பதற்கு சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய சிஷ்யர்களுள் ஒருவர் சுவாமி துரியானந்தர். யோக நெறி பிறழாது வாழ்க்கை வாழ்ந்தவர் அவர். அத்தகையவருக்கு முதுகில் ராஜபிளவை வந்துவிட்டது. ஆயினும் அவர் அதைப் பொருள் படுத்தாது இருந்தார். அதற்கு ரணவைத்தியம் செய்யவேண்டும் என்றும் அதற்காக அவருக்கு மயக்க மருந்து (குளோரபார்ம்) தரவேண்டும் என்றும் டாக்டர்கள் அபிப்பிராயப்பட்டார்கள். ஆனால் சுவாமிகளோ மயக்க மருந்தை ஏற்று அதன் மூலம் தமது பிரக்ஞையை மறைத்து வைக்கத் தமக்கு இஷ்டமில்லை யென்று மறுத்துவிட்டார். அப்படியானால் ரணவைத்தியம் செய்ய முடியாது என்று டாக்டர்கள் சொல்லிவிட்டார்கள். அவ்வைத்தியம் செய்யா

விட்டால் உடல் வேதனைப்படுவதற்கு முடிவொன்றுமில்லை என்னும் நெருக்கடி ஏற்பட்டிருந்தது. தமது குரு சகோதரராகிய பிரம்மானந்த சுவாமிகள் சொல்லுகிற சொல்லுக்கு துரியானந்த சுவாமிகள் மறுப்புக் கூறமாட்டார். இதை அறிந்திருந்த பணிவிடைக்காரர்கள் பிரம்மானந்த சுவாமிகளிடம் போய் விஷயத்தை வெளியிட்டார்கள். அவர் துரியானந்த சுவாமிகளிடம் வந்து ரணவைத்தியத்தின் அவசியத்தை எடுத்துச்சொல்லி அதன்பொருட்டு அவர் மயக்க மருந்து ஏற்கவேண்டியதில்லை; ஆனால் உடல் உணர்வைச் சிறிது ஒதுக்கிவைத்தாக வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். துரியானந்த சுவாமிகளும் அதற்கு இசைந்தார். அந்த ரணவைத்தியத்துக்கு அரைமணி நேரம் பிடித்தது. அப்படி அரைமணி நேரத்துக்கு அவர் உடல் உணர்வினின்று விலகியிருந்துகொண்டார். யோகத்தில் முன்னேறியவர்களுக்கு உடல் உணர்வை ஒதுக்கிவைக்கும் திறமை வருகிறது. அத்திறமையை ஒருவித யோகசித்தி என்று சொல்லலாம். அது தமக்கு வாய்க்கவில்லை என்பதை **துன்பங்கள் சேராமல் யோகமார்க்க சித்தியோ வரவில்லை** என்கிறார் தாயுமானவர்.

யோகசாதனத்திலே பெரிதும் முன்னேறியதன் மூலமாகவோ, பக்தியில் ஓங்கி ஊறியிருப்பதன் மூலமாகவோ, அல்லது ஞானத்தில் முதிர்ந்திருப்பதன் வாயிலாகவோ ஆத்ம சாதகன் ஒருவன் சகஜ நிஷ்டையென்னும் பெருநிலையைப் பெற்றுவிடலாம். சகஜ நிஷ்டையைப் பெற்றிருக்கிற ஆத்ம சாதகனுக்கும் அதைப் பெறாதிருக்கிற சாதாரண மனிதனுக்கும் இடையிலே வெளித்தோற்றத்தில் வித்தியாசம் ஒன்றுமில்லை. இருவரும் உலகக் கிருத்தியங்களை ஓடியோடிச் செய்கின்றனர்; ஓய்வின்றிச் செய்கின்றனர். ஒரு

விதத்தில் ஆத்மசாதகன் உலகப்பற்றுடையவனைவிடப் பன் மடங்கு அதிகமாக உழைக்கின்றான். ஆயினும் சகஜநிஷ்டை யிலிருப்பவனுக்கும் உலகப்பற்றில் உழல்பவனுக்கும் இடை யில் பெரிய வேற்றுமை ஒன்று உண்டு. உலகப்பற்றில் உழல்பவன் ஓயாது இன்ப துன்பங்களுக்கிடையில் உழன்று வருகின்றான். ஆனால் சகஜநிஷ்டையிலிருப்பவனோ எண் ணிறந்த கிருத்தியங்களைச் செய்வதற் கிடையில் தனது மனதை அதீதநிலையில் ஆழ்ந்து பதியவைத்து விடுகிறான். ஆதலால் இவ்வுலக சம்பந்தமான இன்ப துன்பங்களோ உடல்வேதனையை முன்னிட்டு வருகிற இன்ப துன்பங்களோ சகஜ நிஷ்டையில் இருப்பவனுக்கு இம்மியளவும் இல்லை. தமக்கு அத்தகைய மனபரிபாகம் வாய்க்கவில்லை யென்பதை **சகச நிஷ்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம்** எனத் தாயுமானவர் பகர்கிறார்.

சாதன வகைகளை யோகத்துக்குரியவை என்றும் பக்தி மார்க்கத்துக்குரியவைகள் என்றும் ஞானமார்க்கத்துக்குரி யவைகளென்றும் பாகுபடுத்துகிறோம். ஆனால் அத்தனை விதமான சாதனங்களெல்லாம் பரமாத்மாவுக்கும் ஜீவாத்மா வுக்கும் இடையிலே பேதமில்லாத ஐக்கிய நிலையைக் கொண்டுவருதல் பொருட்டேயாம். அந்த ஐக்கியநிலை வாய்த்தானபிறகு உலகத்தையொட்டிய இன்னல்களும் உடலையொட்டிய இன்னல்களும் தாமாக மறைந்துபட்டுப் போய்விடுகின்றன. அந்த ஐக்கிய நிலையிலே ஆத்மசாதகன் பெறவேண்டிய பெருநிலையை பெற்றவன் ஆகிறான். அத் தகைய வாய்ப்பு ஆத்ம பரிபாகத்துக்கு ஏற்ப ஒரு நொடிப் பொழுதில் கிடைக்கலாம். அல்லது எண்ணிறந்த பிறவி களுக்குப்பிறகு கிடைக்கலாம். எப்பொழுது கிடைக்கும் என்பதற்கு விடையாய் வாய்த்திருப்பது அந்தந்த சாதக

னுடைய பரிபாகமேயாம். அப்பெருநிலையை எண்ணி நான் ஏகமாய் நின்னேடிருக்கு நாள் எந்தநாள்? இந்நாளில் முற்றுருதோ? எனப் பரிந்து தாயுமானவர் விண்ணப்பிக் கிருர். துன்பம் நிறைந்த இம்மண்ணுலக வாழ்வையொட் டிய நாட்கள் முற்றுப்பெற்றுவிட வேண்டும். துன்பம் கல வாத பேரின்ப நிலையை விளக்குகிற, இறைவனேடு ஏகமா யிருக்கிற நன்னுள் எப்பொழுது வாய்க்கும் என அவர் வணங்கிக் கேட்கிருர். இக்கருத்துக்கள் யாவும் மேலே வந் துள்ள பாடலில் அடங்கியுள்ளன.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 7

ஒருமைமன தாகியே அல்லலற நின்னருளில்
ஒருவன்நான் வந்திருக்கின்
உலகம் பொருததோ மாயா விசித்திரமென
ஓயுமோ இடமில்லையோ
அருளுடைய நின்னன்பர் சங்கைசெய் திடுவரோ
அலதுகிர்த் தியகர்த்தராய்
அகிலம் படைத்தெம்மை யாள்கின்ற பேர்சிலர்
அடாதென்பரோ அகன்ற
பெருமைபெறு பூரணங் குறையுமோ பூதங்கள்
பேய்க்கோல மாய்விதண்டை
பேசுமோ அலதுதான் பரிபாக காலம்
பிறக்கவில்லையோ தொல்லையாம்
இருமைசெறி சடவினை எதிர்த்துவாய் பேசுமோ
ஏதுளவு சிறிதுபுகலாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

வனத்தில் செங்குத்தாய் வளர்ந்திருக்கும் மரத்தை வனஸ்பதி என்கிறோம். அப்படி வளர்ந்திருக்கும் மரங்களையெல்லாம் பல வனங்களில் சென்று ஆராய்ந்துபார்த்தால் உண்மையொன்று வெளியாகும். ஓங்கி வளருகிற மரங்கள் ஒன்றுக்கொன்று நிகராயிருக்குமேயொழிய ஒன்று மற்றவைகளுக்குமேல் தலையெடுக்க அவைகள் இடந்தருவதில்லை. மிகைபட வளர்ந்திருக்கும் மரம், மற்ற மரங்கள் சூரிய வெளிச்சத்தையும் வெப்பத்தையும் ஏற்பதற்கு இடைஞ்சலாய் நிற்கும். அவையாவும் ஒரே அளவில் இருக்கும்

பொழுது சமனுகப் பங்கிட்டு அவைகளின் வளர்ச்சிக்கு ஏதுவாயிருக்கும் சூரியப் பிரகாசத்தையும் உஷ்ணத்தையும் வாங்கிக் கொள்ளுகின்றன. இதே விதத்தில் வாழ்வுக்கு இன்றியமையாத வசதிகளை மற்ற உயிர் வகைகளும் சமனுகப் பங்கிட்டுக்கொள்ள முயலுகின்றன. மற்றவைகளுக்கெல்லாம் வாய்க்காத வசதிகள் ஏதேனும் ஒன்றுக்கு வாய்க்குங்கால் அவ்வசதிகளைப் பகுத்தெடுக்கவே மற்றவைகள் முயலுகின்றன. இக்கோட்பாட்டுக்கு மனிதன் விலக்கு ஆனவன் அல்லன். மானுட சமுதாயத்திலே மக்கள் எல்லோரும் சற்று ஏறத்தாழ ஒரே தரத்தில் இருப்பது அவர்களுக்குச் சம்மதம். ஏதேனும் ஒருவனுக்கு மிகைபட்ட சம்பத்துக்கள் வாய்த்துவிட்டால் அதற்கு மற்றவர்கள் சம்மதம் கொடுப்பதில்லை. ஏதேனும் ஒருவிதத்தில் அவனைக் கீழ் நிலைக்கு இழுத்து வர ஏனையவர்கள் முயலுகின்றனர். இது உலக வாழ்க்கையைப்பற்றிய கோட்பாடு ஆகும்.

மானுட வாழ்வு இன்பமும் துன்பமும் கலக்கப்பெற்றது. துன்பம் கலவாத இன்பத்தை வாழ்வில் யாரும் பெறமுடியாது. ஆனால் இறைவனுடைய சான்னித்தியத்தை அணுகுதற்கு ஏற்ப துன்பம் குறைகிறது; இன்பம் ஓங்குகிறது. இறைவனுடைய சான்னித்தியத்தை முற்றிலும் எட்டிவிட்டால் ஆங்குத் துன்பத்துக்கிடமில்லை. சூரியனுடைய முன்னிலையில் எப்படி இருளுக்குஇடமில்லையோ அப்படி இறைவனுடைய அருளின் முன்னிலையில் அல்லலுக்கு இடமில்லை. அல்லல் அற்ற நிலையும் இறைவனுடைய சான்னித்தியமும் ஒன்றேயாம். அத்தகைய பெருநிலையை யெட்டுதற்கு உபாயம் ஒன்றே உளது. மனதை அதற்கேற்றவாறு பக்குவப் படுத்துமிடத்து அப்பெருநிலை வாய்க்கிறது. பக்குவப் படாத மனது பலப்பல எண்ணங்களில் உழல்கிறது.

பக்குவமடைந்து வருகிற மனது பயனற்ற எண்ணங்களை யெல்லாம் ஒதுக்கித் தள்ளுகிறது. எண்ணங்கள் ஒழிந்து பட்டுப்போவதற்கு ஏற்ப உள்ளத்தினுள் நடுநிலை வந்தமைகிறது. ஒருமைப்பட்டுள்ள மனதுக்கு நிகரான வாய்ப்பு எதுவும் இல்லை. ஓர் உபமானத்தால் இதை யெடுத்து விளக்கலாம். நூலின் நுனியிலுள்ள இழைகள் நாலாபக்கமும் விரிந்து கிடக்கின்றன. அந்நிலையிலுள்ள நூலை ஊசியின் காதில் செலுத்த முடியாது. ஆனால் நூலை முறுக்கி இழைகள் யாவும் குவிந்து கூர்மைப்படும்படி செய்தால் அதை ஊசியின் காதில் நுழையப் பண்ணலாம். முறுக்கிக் கூர்மைப் படுத்திய நூலுக்கு நிகர் மனது. எண்ணிறந்த எண்ணங்களை யெல்லாம் ஓட்டிவிட்டு இறைவனைப்பற்றிய ஒரே எண்ணத்தில் மனது ஊறியிருக்குமாகில் இறைவனுடைய அருளை அது அடையப்பெறுகிறது ; அதற்கேற்றவாறு அல்லல் நீங்குகிறது ; பேரானந்தம் பெருக்கெடுக்கிறது. மற்றவர்களெல்லாம் திரும்பத் திரும்பத் துன்பத்தைத் துய்த்துக் கொண்டிருக்கையில் ஏதோ ஓர் ஆத்ம சாதகன் துன்பம் கலவாத இன்பத்தில் தோய்ந்திருப்பதைக் கண்டு உலகம் சகிக்காது. இக்கருத்தை ஒருமை மனதாகியே அல்லல் அற **நின் அருளில் ஒருவன் நான் வந்திருக்கில் உலகம் பொருததோ ?** என்கிறார் தாயுமானவர்.

மாயை என்னும் கோட்பாட்டை உள்ளவாறு அறிந்து கொள்ளுபவர்கள் மிகச் சிலரேயாம். அதை முறைதவறிப் பொருள்படுத்துபவர்களே பெரும்பாலர். உண்மையில் மனமும் மாயையும் ஒன்றேயாம். மனமிருக்குமிடம் மாயையின் விளையாட்டு ; மனதற்ற இடமோ மாயாரகிதமானது. எத்தனை யெத்தனையோ வடிவங்களில் விரிந்திருக்கும் பிரபஞ்சம் மாயையின் விகாரம். மனம் ஒடுங்குகிற இடத்து

மாயையும் மாயமாய் மறைந்துபோகிறது. இதற்கு சுஷுப்தி அவஸ்தை யென்னும் கனவற்ற உறக்கமே நல்ல சான்று ஆகும். கனவில்லாதஉறக்கத்தில் உள்ளம் ஓய்ந்திருக்கிறது. அதற்கு ஏற்ப உலகின் எண்ணிறந்த விரிவுகளெல்லாம் தாமாக ஒடுங்கிவிடுகின்றன. அறவே மனம் ஒழிந்துபட்டுப் போனவிடத்து அண்டகோடிகளாக விரிந்திருந்து காட்சி கொடுக்கிற மாயையும் மறைந்து பட்டுப்போகிறது. நமது உறக்கமே இவ்வுண்மைக்கு நல்ல எடுத்துக்காட்டாகிறது. இவ்வுண்மையை **மாயாவிசித்திரமென ஓயுமோ** என்கிறார் தாயுமானவர்.

ஒருவன் அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கிற பொழுது அவனுக்குமட்டும் மாயா விகாரங்களனைத்தும் இல்லாது ஒடுங்கிவிடுகின்றன. மற்றவர்களுக்கு அது இருக்கிறது. இதற்கு ஏற்ற சான்றை இன்னொரு விதத்தில் எடுத்துக் கையாளுவோம். பகல் நேரத்தில் இரண்டு அன்பர்கள் பக்கம் பக்கம் இருந்து ஏதேதோ விஷயங்களைப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பேச்சுக்கிடையில் ஒரு நண்பனுக்கு ஆயாசத்தால் உறக்கம் வந்துவிடுகிறது. அந்நிலையில் அவனுக்கு அருகிலிருக்கும் நண்பனும் இல்லை; உலகும் இல்லை. ஆனால் விழித்திருக்கிறவனுக்கோ தான் இருப்பதும் உண்மை; உலகு இருப்பதும் உண்மை; தன் நண்பன் உறங்கிக் கொண்டிருப்பதும் உண்மை. ஆக, ஒருவனுக்கு மாயாகாரியங்கள் இல்லாது போய்விடுவதால் மற்றவர்களுக்கும் அது இல்லாது போய்விடுவதில்லை. மாயை ஆதிக்கம் செலுத்துவதற்கு வேறு இடங்களும் உயிர்களும் இருக்கின்றன. ஆத்ம சாதகன் ஒருவன் தன் மனதை நிரந்தரமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு பரம்பொருளில் ஒன்றுபட்டிருப்பதை முன்னிட்டு மாயாதேவிக்கு தனது ஆதிக்கத்தைச் செலுத்துதற்கு முக்தனாகிய தன்னைத் தவிர **வேறு இடமில்லையோ?** என அண்ணல் பணிவுடன் விண்ணப்பிக்கின்றார்.

மானுடரது சிற்றியல்புக்கு மற்றொரு சான்றை உலக வழக்கில் நாம் காணலாம். இருப்புப்பாதைவண்டி யொன்றனுள் பிரயாணிகள் பலர் அமர்ந்திருக்கின்றனர். இன்னும் சிலர் அதனுள் வந்து அமர்தற்கும் இடமிருக்கிறது. ஆனால் முதலில் அவ்வண்டியை உரிமையாக்கிக்கொண்டவர்கள் பிந்தி வருகிற யாருக்கும் இடம்கொடுக்காது அவர்களைப் பக்கத்திலுள்ள வேறு வண்டிகளைப் பயன்படுத்தும்படி கடத்துவது உலகத்தவர் இயல்பு. சர்வேசுவரனை அடைந்திருப்பவர்களுக்கிடையிலும் இத்தகைய கீழான மனப்பான்மை எஞ்சியிருக்கிறதா என்பது கேள்வி. சர்வேசுவரன் ஒருவர்தான் உண்மையான சங்கப்பலகை. தகுதி வாய்ந்திருக்கிறவர்களுக்கெல்லாம் அச்சங்கப்பலகையில் தங்குதற்கு இடமுண்டு. புதிதாக வருகிற பக்குவி ஒருவனுக்கு ஆங்கு இடமில்லைபோன்றுதென்படும். ஆனால் அவன் வந்ததும் அவனுக்கேற்ற இடம் ஆயத்தமாயிருப்பது வெளிப்படை. இதை அறிந்துகொள்ளாமையினாலோ அல்லது தாங்கள் பூர்வ ஜன்மாந்தரங்களில் பெற்றுள்ள குறுகிய மனப்பான்மையை முன்னிட்டோ ஏற்கனவே இறைவனுடைய திருவடியைத் தங்களுக்கு உரிமையாக்கிக்கொண்டவர்கள் தாம் தெய்வத்தின் திருவடியை எட்டுதற்குத் தடை ஏதேனும் செய்வார்களோ என்னும் கருத்தை **அருளுடைய நின்னன்பர் சங்கை செய்திடுவரோ ?** என்கிறார் தாயுமானவர்.

ஒரு குடித்தனத்திலோ அல்லது துரைத்தனத்திலோ வெவ்வேறு அலுவல்களைக் கவனிப்பதற்குவெவ்வேறு மக்கள் அமர்ந்திருக்கின்றனர். அவர்களுள் ஏதேனும் ஒருவர் ஒரு காரியத்தை முன்னிட்டுத் தமது அலுவலினின்று விலகியிருக்க வேண்டியதாகும்பொழுது அவர்பொருட்டு மற்றொருவரை நியமிப்பதில் பல தடவைகளில் சிரமம் ஏற்படுகிறது.

அவருக்கு வதில் ஆள் வாய்க்கும் வரையில் தம் வேலையை விட்டு அவர் போகக்கூடாது என்று கட்டாயப்படுத்துபவர் களும் உண்டு. பிரபஞ்ச நடைமுறையும் இது போன்றது. படைத்தல், காத்தல், துடைத்தல் போன்ற பெரிய காரியங் களுக்கேற்ற கர்த்தாக்கள் இருக்கின்றனர். அவர்களுக்குக் கீழ் சிறிய சிறிய கிருத்தியங்களை நிறைவேற்றுகிற சில்லரை தேவதைகளும் இருக்கின்றூர்கள். இங்ஙனம் பலப்பல செயல்களுக்கு அதிஷ்டான தெய்வங்களாக அமைந்திருப்ப வர்கள் எண்ணிறந்த ஜீவகோடிகளை முகாமையாக வைத் துக்கொண்டு தங்களுடைய காரியங்களை நிறைவேற்றி வரு கின்றனர். அதனுல் பிரபஞ்சத்தின் நடைமுறையும் ஒழுங் காக நிகழ்ந்து வருகிறது. எண்ணிறந்த ஜீவகோடிகளில் ஏதேனும் ஒரு ஜீவாத்மா பரிபக்குவமடைந்து முக்தியை நாடிச் சென்றுவிட்டால் பிரபஞ்ச நடைமுறைக்குக் கர்த்தாக் களாக இருப்பவர்கள் தங்கள் கிருத்தியங்களுக்கு ஏதேனும் தடையேற்படும் என்று மறுக்கிறூர்களா என்னும் கருத்தை **அலது கிருத்திய கர்த்தராய் அகிலம் படைத்து எம்மை ஆள்கின்ற பேர் சிலர் அடாது என்பரோ?** என்று தாயு மானவர் வினவுகிறூர். அகிலம் என்னும் சொல் பிரபஞ்சத் தைக் குறிக்கிறது. அடாது என்னும் பதத்துக்கு தகாது என்பது பொருள்.

எது ஒன்று எத்தகைய வரையறையிலும் கட்டுப்படா திருக்கிறதோ அது பூரணம் எனப்படுகிறது. உண்மையில் பரம்பொருள் ஒருவரே பூரணப்பொருள். காலம், தேசம், நிமித்தம் என்பவைகளுள் அவர் கட்டுப்படுவதில்லை. ஆனல் அப்பூரணப் பொருளை மனது எனும் அற்பக் கரணத்தைக் கொண்டு நாம் அறிந்துகொள்ள முடியாது. நம் மனதுக்கு எட்டுகிற வஸ்து ஏதேனும் ஒன்றைக்

கொண்டே பூரணப்பொருளை ஒருவாறு நாம் யூகித்து அறிந்துகொள்ளலாம். நீர்நிலைகளுள் கடல் பூரணப் பொருள். ஆறுகளும் தடாகங்களும் சஞ்சரிக்கின்ற மேகங் களும் அப்பூரணத்தினின்று வந்தவைகள். கடலினின்று கையளவு ஜலத்தை நாம் அள்ளி யெடுத்துக்கொண்டால் அதை முன்னிட்டு கடலின் நிறைவுக்குக் குறை ஒன்றும் வருவதில்லை. அது பழையபடி நிறைபொருளாகவே இருக் கிறது. அண்ட கோடிகளாகத் தோற்றத்துக்கு வந்திருப் பவைகளிடத்து ஒருவித பூரண நிலை இருக்கிறது. இக்கோட் பாட்டை பூரணமத: பூரணமிதம் என்கிறது உபநிஷதம். தோற்றத்துக்கு அப்பாலிருப்பது பூரணம்; தோற்றத்துக்கு வந்திருப்பது பூரணம் என்பது இதன்பொருள். தோற்றத் திற்கு வந்துள்ள பூரணத்தில் ஜீவனாகிய நான் அடங்கியிருக் கிறேன். ஒரு கையளவு ஜலத்தைக் கடலிலிருந்து எடுத்து விட்டால் கடலின் நிறைவானது எப்படிக் குறைவு ஆவ தில்லையோ அப்படி ஜீவனாகிய என்னைத் தோற்றத்துக்கு வந்துள்ள பூரணத்தினின்று பிரித்தெடுத்து, தோற்றத்துக்கு அப்பாலுள்ள பூரணத்திலே ஒடுங்கும்படி செய்துவிட்டால் தோன்றியுள்ள பூரணத்துக்கு ஒருபொழுதும் குறை வந்து விடாது என்னும் கோட்பாட்டை அகன்ற பெருமைபெறு **பூரணம் குறையுமோ?** என்று அண்ணல் விண்ணப்பிக் கிறார்.

பிரபஞ்சம் முழுதும் நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி என ஐம்பூதங்களால் அமையப்பெற்றிருக்கிறது. இவ் ஐந்தும் ஒன்றுக்கொன்று சம்பந்தப்படாத தனித் தத்துவங் கள் அல்ல. மூலப் பிரகிருதியின் பலதரப்பட்ட விகாரங்கள் ஐம்பூதங்கள் எனப்படுகின்றன. ஒரு பூதம் மற்றொரு பூத மாக மாறியமையும் தன்மையுடையது. பூதங்களைக்கொண்டே

பிரபஞ்ச முழுதிலும் உள்ள சேதனப் பொருள்கள் அசேத னப் பொருள்கள் தோன்றியிருக்கின்றன. இந்த ஐம்பூதங் களை ஓயாது பயன்படுத்தி வருவது இயற்கையின் செயலா கும். ஒரு தனி மனிதனுடைய உடல் வாழ்க்கையைச் சான் ருக எடுத்துக்கொள்ளுவோம். அவனுடைய உடலமைப் பில் ஐம்பூதங்களும் இடம் பெற்றிருக்கின்றன. அவ்வவை களுக்குரிய செயல்களும் உடலிலே நிகழ்ந்து வருகின்றன. ஒரு வீட்டில் மனிதன் குடியிருக்கிருன் என்பதை அவ் வீட்டைப் பார்த்துத் தீர்மானிக்கலாம். வீட்டினுள் உள்ள ஒழுங்குப்பாடு முதலியன அதில் யாரோ குடியிருக்கிருன் என யூகிப்பதற்கு இடந்தருகின்றன. அம்மனிதன் வீட்டை விட்டுக் குடிபோய்விட்டால் குடிபோனதின் அறிகுறி நாள் தோறும் அதிகரித்துக்கொண்டு வரும். உடல் என்னும் வீட்டில் ஜீவாத்மன் குடியிருக்கிருன். அதில் அவன் குடி யிருப்பதற்கு அறிகுறியாக ஐம்பூதங்களாலாகிய அவ்வுடல் அமைந்திருக்கிறது. ஜீவாத்மன் உடலைவிட்டுப் பிரிந்த வுடன் உடலுக்குப் பிணம் என்னும் புதிய பெயர் வந்துவிடு கிறது. குடிபோன வீடுபோன்று அது விரைவில் க்ஷீண தசையடைகிறது. ஜீவாத்மன் முக்தியடையும்பொழுது ஐம்பூதங்களாலாகிய உடலுக்கு நிரந்தரமாகத் தேவையில் லாது போய்விடுகிறது. அப்பொழுது பூதங்கள் தாறுமாருக இயங்கிக் குழப்பத்தை உண்டுபண்ணிவிடுமோ என்னும் கேள்வியை **பூதங்கள் பேய்க்கோலமாய் விதண்டை பேசுமோ?** எனத் தாயுமானவர் கேட்கின்ருர். பொருந் தாத பேச்சை விதண்டை அல்லது விதண்டாவாதம் என் கிருேம். ஒழுங்குப்பாடற்ற நிலையைப் பேய்க்கோலம் என் கிருேம்.

இயற்கையில் நிகழ்கிற அனைத்தின் மீதும் காலம் ஆதிக்கம் மிகச் செலுத்தி வருகிறது. ஆகாதது எனப்படுவது

காலக்கிரமத்தில் ஆய்விடுகிறது. ஆலின் விதை கடுகினுஞ் சிறியதாக பூமியில் கிடக்கிறது. அதனுள் புதைந்திருக்கும் பேராற்றல் அப்பொழுது புலனுவதில்லை. ஆனல் அது முளைத்து வளர ஆரம்பித்து நூறு ஆண்டுகளுக்குப் பிறகு பார்த்தால் அதன் பேராற்றல் முழுதும் வெளியாகிறது. அங்ஙனம் உயிர்கள் அனைத்தையும் பக்குவப்படுத்துவதற்கு காலமானது பெரியதொரு முகாமையாக இருந்து வருகிறது. இறைவனுடைய அருளை நாடுகிற தமக்கு அவ் அருளைப் பெறுதற்கேற்ற பருவம் இன்னும் வாய்க்கவில்லையோ என்னும் கருத்தை அலதுதான் **பரிபாக காலம் பிறக்கவிலையோ?** என்கின்ருர் அண்ணல்.

பிரபஞ்சம் முழுதும் கர்ம சொரூபம். எங்குப் பிரபஞ்சம் இருக்கிறதோ அங்குக் கர்மம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. பிரபஞ்சத்தோடு தன்னை இணைத்துக் கொள்ளுகிற ஜீவாத்மன் கர்மத்தோடும் தன்னை இணைத்தே ஆகவேண்டும். உண்மையில் கர்மம் ஒன்று எனினும் ஜீவாத்மன் அதினின்று அடைகிற பயனை முன்னிட்டு நல்வினை தீவினை என இரண்டாக அது பிரிக்கப்படுகிறது. மனிதனை உயர்நிலைக்கு உயர்த்தும் கர்மத்தை சத்கர்மம் அல்லது நல்வினை யென்று இயம்புகிறோம். மனிதனைக் கீழ்மையில் ஆழ்த்தும் செயலை துஷ்கிருத்தியம் என்றும் தீவினை யென்றும் பகர்கிறோம். வினையின் மூலமாகவே மனிதன் தன்னை ஓயாது மேன்மையிலும் கீழ்மையிலும் மாற்றி மாற்றி அமைத்து வருகின்ருன். முக்தி நிலை யென்பது பிரபஞ்சத்துக்கு அப்பாற்பட்டது. முக்தியில் வினைக்கு வேலையில்லை. கர்மா அதீதம் எனப்படுகிறது முக்தி. இறைவனை அடைகிற ஜீவாத்மன் கர்மத்தையெல்லாம் விட்டொழிப்பவனுகிருன். கர்மத்தில் அவன் கட்டுண்டிருக்கிற பொழுது அவன் கர்மி என்று அழைக்கப்

படுகிருன். கர்மத்துக்குத் தன்னளவில் உணர்வு கிடையாது. ஜடநிலையில் உள்ள இயக்கம் கர்மம் எனப்படுகிறது. அதைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளுகிற ஜீவன் தான் புரிகிற கர்மத்தின் விளைவுக்கு ஏற்ப இன்ப துன்பத்தை அனுபவிக்கிருன். இன்பதுன்பம் சேதனப் பொருளாகிய ஜீவாத்மனுக்கு உரியது. அவனிடத்து இன்ப துன்பத்தை ஊட்டுகிற கர்மமோ ஜடநிலையில் இருக்கிறது. ஆதியந்த மில்லாது பிரகிருதியானது யாண்டும் இருந்து வருவதால் அதன்பால் நிகழ்கின்ற வினையும் தொன்மை பூண்டதாய் யாண்டும் இருந்துவருகிறது. ஜீவாத்மன் ஒருவன் முக்தியை யெய்துங்கால் அவன் மூலம் நிகழ்ந்து வந்த கர்மத்துக்குக் கர்த்தா இல்லாது போய் விடுகிறது. தாம் அடைகிற முக்தியை முன்னிட்டு சங்கடமான நிலையில் இருந்துகொண்டு **தொல்லையாம் இருமை செறி சடவினை எதிர்த்து வாய் பேசுமோ?** என்கிருர் தாயுமானவர். நன்மை தீமை கலந் திருப்பதால் வினை இருமை செறி எனப்படுகிறது. அது அசேதனமாதலால் ஜடவினை எனப்படுகிறது. ஜடமாக இருக்கிற அதற்கு பேசுந்திறமை வந்துவிடுமோ என்னும் கேள்வியில் இறைவனுடைய அருளைப் பெறுவது எவ்வளவு கடினமானது என்பது மறைந்து நிற்கிறது.

இறைவா, நான் உன் அருளைப் பெற்று உன் சொரூபத் தில் ஒன்றித்து இருக்க எவ்வளவுதான் முயன்றும் அது இன்னும் கைகூடாதிருப்பதற்கு அடிப்படைக் காரணம் யாது என்பதை எனக்கு உள்ளபடி தெரிவிக்க மாட்டீரா என்னும் விண்ணப்பத்தை **ஏது உளவு சிறிது புகலாய்** எனத் தாயுமானவர் தெரிவிக்கிருர். இக்கருத்துக்கள் யாவையும் அண்ணல் இப்பாடலில் அடக்கிவைத்திருக்கிருர்.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 8

நில்லாது தேகமெனும் நினைவுண்டு தேகநிலை
நின்றிடவும் மௌனியாகி
நேரே யுபாயமொன் றருளினை ஐயோ இதனை
நின்றனுஷ் டிக்களன்றால்
கல்லாத மனமோ வொடுங்கியுப ரதிபெறக்
காணவிலை யாகையாலே
கையேற் றுணும்புசிப் பொவ்வாதெந் நாளும்உன்
காட்சியி லிருந்துகொண்டு
வல்லாள ராய்இயம நியமாதி மேற்கொண்ட
மாதவர்க் கேவல்செய்து
மனதின் படிக்கெலாஞ் சித்திபெறலாம் ஞானம்
வாய்க்குமொரு மனுவெனக்கிங்கு
இல்லாமை யொன்றினையும் இல்லாமை யாக்கவே
இப்போ திரங்குகண்டாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

வாழ்க்கையைப் பற்றிய சில உண்மைகள் தெளிவுற நமக்கு விளங்குகின்றன. அப்படி விளங்கியிருந்தும் அவ்வுண்மைகளுக்கு ஒப்ப வாழ்க்கையைத் திருத்தியமைக்க நமக்கு இயலுவதில்லை. அதற்கு எடுத்துக்காட்டாக நிகழ்ச்சி ஒன்றைக் குறிப்பிடலாம். பாண்டவர் ஐவரும் வனவாசம் செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது எத்தனையோ துன்பங்களுக்கு ஆளானார்கள். ஒருதடவை நீர் கொண்டு வரச் சென்ற தம்பிமார் நால்வரும் ஒரு தடாகத்திலிருந்த நீரை அருந்தி ஒருவன்பின் ஒருவனாக மாண்டுபோயினர்.

கடைசியாக மூத்தவன் தர்மனும் அத்தடாகக் கரைக்குச் சென்று தம்பிமார் காலகதியானதைக் குறித்து வருந்துதற் கிடையில் தானும் தாகசாந்தி செய்து கொள்ளத் தடாகநீரை அள்ளினன். அப்பொழுது அசரீரி ஒன்று அவன் காதில் விழுந்தது: "பொறு, இந்நீரை அருந்தினல் நீயும் மடிவாய். ஆனல் நான் கேட்கும் கேள்விகளுக்குச் சரியாக விடை கொடுத்தால் நீ உய்வு அடைவாய். செத்த நிலையில் கிடக் கும் நால்வரையும் காப்பாற்றுவாய்."

"என்னல் இயன்ற அளவு கேள்விகளுக்கேற்ற விடை கொடுக்கிறேன்" என்ருன் தருமன். அப்பொழுது எழுந்த கேள்விகளுள் ஒன்று, "ஆச்சரியங்களில் பேராச்சரியம் எது?"

தர்மராஜன் விடை விடுப்பானுயினன்: "நாள்தோறும் மக்கள் மாண்டு மறுலோகம் போய்க் கொண்டிருக்கின்றனர். உற்ருர் உறவினரும் அவர்களை வழியனுப்பிக் கொண்டிருக் கின்றனர். ஓயாது நிகழ்ந்து வருகிற இந் நிகழ்ச்சிகளுக் கிடையில் ஒவ்வொரு மனிதனும் தான் மட்டும் அழிந்துபட் டுப் போகாது இந்த அவனியில் வாழ்ந்திருக்க முடியும் என்று எண்ணி வருகிருன். இதுவே ஆச்சரியங்களுள் பேராச்சரியம்."

தருமன் கொடுத்த விடைகளில் திருப்தியடைந்த யக்ஷன் மயங்கிக்கிடந்த தம்பிமாரை எழுப்பி ஐவருக்கும் ஆசி கூறினன். வாழ்வைப்பற்றிய உண்மைகளை உள்ளபடி அறிந்து அவைகளை அனுஷ்டிக்கின்றவர்களே பெருவாழ் வுக்குத் தகுதியுடையவர் ஆகின்றனர். வாழ்க்கையைப் பற்றிய உண்மைகளுள் உடல் நிலையற்றது என்பது வெளிப் படையாக நிரூபிக்கப்படுகிறது. இவ்வுண்மையை நில்லாது தேகம் எனும் நினைவு உண்டு என்கிருர் தாயுமானவர்.

பாரமார்த்திகப் பெருவாழ்வு வாழுகின்றவர்களுடைய பாங்கு ஒன்று உண்டு. உடல் தரித்து அதில் வாழ்ந்திருப்பதற்கிடையில் உடலைப்பற்றிய ஞாபகம் சிறிதேனும் அவர்களுக்கு உண்டாவதில்லை. நாம் வெயிலில் நடந்து செல்லும் பொழுது நமது உடலின் நிழல் உண்டாகிறது. நிழல் நம்மைத் தொடர்ந்து வருகிறது. ஆனால் நிழலைப்பற்றிய நினைவு நமக்கு வருவதில்லை. நிழலை நாம் நேரே பார்க்குமிடத்தும் அதை நாம் பொருள்படுத்துவதில்லை. நிழலானது நேரத்துக்கு ஏற்றவாறு நீண்டும் குறுகியும் இருக்கிறது. படிகிற இடத்துக்கேற்றவாறு வளைந்தும் நிமிர்ந்தும் இருக்கிறது. சில இடங்களில் கிடக்கும் அசுசியின் மீதும் அந்த நிழல் படுகிறது. ஆயினும் அந்த நிழலிலே உண்டாகிற வேறுபாடுகளையெல்லாம் நாம் பொருள்படுத்தாது இருக்கிறோம். நமக்கு நிழல் எப்படியோ, ஞானிகளுக்கு உடல் அப்படியிருக்கிறது. கர்மத்தின் விளைவாக வந்துள்ள தேகமானது நிழல்போன்று அவர்களைச் சார்ந்திருக்கிறது. ஆனால் தேக உணர்வு சிறிதேனும் அவர்கள் உள்ளத்தில் வருவதில்லை. ஆத்மசாதகன் ஒருவன் புரிகின்ற சாதனத்தில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறான் என்பதற்கு அவனிடத்துள்ள தேகாத்ம புத்தி எவ்வளவு தூரம் அகன்று இருக்கிறது என்பதே அறிகுறியாகும். தேகத்தைத் தான் என்று கருதுவது தேகாத்ம புத்தி. பழுத்த புளியம்பழம் மேல் ஓட்டுக்கு வேறாய் விடுவது போன்று பழுத்த ஞானி தேகத்துக்குப் புறம்பாய் விடுகிறான். உடல் உணர்வைக் கடந்த நிலை பெருநிலை என்பதற்குச் சான்றுகள் பல நமது வாழ்விலேயே கண்டு வருகிறோம். சிறு குழந்தைகளுக்கு தேகாத்ம புத்தியில்லை. அதன் விளைவாக அவைகள் ஞானிகளுக்குரிய பெருநிலையிலிருந்து வருகின்றன. தேகாத்ம புத்தியானது

அச்சிறுவர்கள் உள்ளத்தில் புகுவதற்கு ஏற்ப சிறு நிலை வருகிறது. அதைத் தொடர்ந்து துன்பமும் பெருகுகிறது. ஆத்ம சாதனங்கள் புரிதல் வாயிலாக தேகத்தைத் தான் என்று எண்ணுகிற எண்ணம் தன்னிடத்துத் தோன்ருத வண்ணம் விலகி நிற்கின்ற நிலை அந்த சாதகனுக்கு வருகிறது. இக்கோட்பாட்டை, **தேகநிலை நின்றிடவும்** என்கிருர் தாயுமானவர். தேகத்தைத் தான் என்று தாங்கிப் பிடிக்கிற மன நிலையானது தன்னிடத்தில் தோன்ருது விலகி நின்றிடவும் என இச்சொல் தொடர் பொருள்படுகிறது.

சாதகன் ஒருவன் யாரிடத்திலிருந்து எந்த சாதன வகையைக் கற்றுக்கொண்டாலும் அந்த சாதனவகைகளின் அடிப்படைக்கோட்பாடு ஒன்று உண்டு. அது பக்தி சாதனமாக இருக்கலாம்; யோகசாதனமாக இருக்கலாம்; ஞான சாதனமாக இருக்கலாம். எல்லாவித சாதனங்களும் உடல் உணர்வைக் கடந்து அப்பால் செல்லுதற்கு உற்ற உபாயங்களாம். குரு ஒருவரிடமிருந்து சிஷ்யன் ஒருவன் கற்றுக் கொள்ளுகிற ஆத்ம சாதனத்தில் இந்த அடிப்படைத் தத்துவம் அகலாது அமைந்திருக்கிறது. தாயுமான சுவாமிகளும் தம்மை ஆட்கொண்ட மௌன குருவிடத்திருந்து பெற்ற ஞான நெறியும் இதுவேயாம். ஆதலால் தாம் பெற்ற பயிற்சியை, உடல் உணர்வு தமது உள்ளத்தில் தோன்ருது நின்றுவிட **மௌனியாகி நேரே உபாயம் ஒன்று அருளினை** என்று இயம்புகிருர்.

ஆத்ம சாதகன் பயிலுகிற சில சாதனங்கள் மேற்போக்கானவைகளாக இருக்கின்றன. அவைகள் உள்ளூற அவனது உள்ளத்தைத் தொடுவதில்லை. ஒரு சான்றின் மூலம் அவ்வுண்மையை ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் விளக்குகின்ருர். கிளிப்பிள்ளை ஒன்றுக்கு கிருஷ்ண, கோவிந்தா

என்று சொல்லும்படி நாம் கற்பித்து வைக்கலாம். அப் பறவையும் கிருஷ்ணு, கோவிந்தா என்று கூறிக்கொண் டிருக்கிறது. ஆனல் பூனையொன்று தென்படும்பொழுது கிருஷ்ணு, கோவிந்தா என்கின்ற திருநாமங்களெல்லாம் மாயமாய் மறைந்தோடி விடுகின்றன. கிளியானது கர் கர் என்று அப்பொழுது கத்துகிறது. சாதகன் ஒருவன் தான் தேகமல்ல என்று தாராளமாகச் சொல்லிக்கொண்டிருக் கிருன். ஆனல் காலில் முள் தைத்து விட்டால் அல்லது உடலில் நோய் தோன்றினல் அவன் உடல் அல்ல என்று சொல்லிக்கொண்டு வந்ததில் எவ்வளவு தூரம் உண்மை பொதிந்திருக்கிறது என்பது வெளியாகிறது. அந்த நிலை யில் தாமும் இருப்பதாக தாயுமானவர் முறையிடுகின்ருர். உடல் உணர்வு உண்டாகாதிருப்பதற்கு உபாயம் ஒன்றை அவருடைய குருநாதர் அருள் புரிந்திருந்தார். ஆனல் ஐயோ இதனை நின்று அனுஷ்டிக்க வென்ருல் கல்லாத மனமோ ஒடுங்கி உபரதி பெறக் காணவில்லை என அவர் முறையிடுகின்ருர். அத்தகைய தீவிரமான பக்குவிக்கே உடல் உணர்வு எளிதில் நீங்குவதில்லை யென்ருல் சாமானிய மான சாதகர்களைப்பற்றிப் பின்பு பேசுவானேன்? கல்லாத மனம் என்று அவர் கூறுவதில் பொருள் மிகப் புதைந்திருக் கிறது. ஏட்டுக்கல்வி கற்றிருக்கிற மனதை வெறும் கல்லாத மனது என்றே கருதவேண்டும். கிளிப்பிள்ளை கிருஷ்ணு, கோவிந்தா என்று சொல்லுவதற்கு நிகரானது ஏட்டுக்கல்வி. மரணமே வந்து வாய்த்த காலையிலும் எண்ணிறந்த துன்பங் களுக்கு ஆளாயிருக்கின்ற வேளைகளிலும் எந்த சாதகன் ஒருவனுடைய உள்ளத்தினின்று இறைவனுடைய ஞாபகம் மறைந்துபட்டுப் போவதில்லையோ, எந்த சாதகனுடைய நாவினின்று இறைவனுடைய திருநாமம் நழுவிப் போவ

தில்லையோ, அந்த சாதகன் படைத்துள்ள மனதே மெய்ஞ் ஞானத்தைக் கற்றுள்ள மனதாகிறது. மற்றவர்களுடைய மனதெல்லாம் கல்லாத மனமெனவே ஒதுக்கித்தள்ளப்படுவ தாகிறது. எந்த சாதகனுடைய உள்ளம் இறைவனுடைய உணர்வில் ஊறியிருக்கிறதோ அந்த உள்ளம் நாளுக்கு நாள் ஒடுங்குகிறது. உலக வியவகாரங்களில் ஊறியிருக்கிற மனதோ விரிவடைந்துகொண்டே போகிறது. இறைவ னுடைய எண்ணத்தில் ஊறி ஊறி முற்றிலும் ஒடுங்கிவிட்ட மனதே உபரதி பெற்ற மனது ஆகிறது. கடலில் அலையா னது முற்றிலும் ஒடுங்குகிற இடத்து அது தன் நாமரூபத்தை இழந்து விடுகிறது. பிறகு கடல் எஞ்சி யிருக்கிறது. மன தில் இடையருது தோன்றுகிற எண்ணங்கள் ஒடுங்கிவிட் டால் பிறகு அம்மனதானது உபரதி பெற்றுள்ள மனது எனப் பெயர் பெறுகிறது. உபரதி பெற்றுள்ள மனது முற்றிலும் பண்பட்டது. அது ஒடுங்கி நசுங்கிப் போவதற்குத் தகுதிவாய்ந்ததாகிறது. உபரதி பெற்றுள்ள மனது வாய்க் கப்பெற்றிருக்கிற ஆத்ம சாதகனுக்கு மட்டும் தேகாத்ம புத்தி வருவதில்லை. உடலைத் தான் என்று எண்ணுகிற எண்ணம் உபரதி பெற்றிருக்கிறவனுக்கு உண்டாகிற தில்லை.

துறவுகளிலெல்லாம் பெரிய துறவு மனதைத் துறந்து விடுதலாம். யார் ஒருவன் மனதைத் துறந்திருக்கிருனே அவனே துறவி வேந்தன். தீவிரமான துறவியைத் தேகமா னது நிழல்போன்று சார்ந்திருக்கிறது. அந்த தேகத்துக்கு பசி தாகம் முதலியன வருகிறபொழுது துறவியானவன் தன்னையறியாது தனது கரங்களை பிக்ஷா பாத்திரமாகப் பயன்படுத்தி தற்செயலாய்க் கிடைக்கிற உணவை பிக்ஷை யாக ஏற்று பசிப்பிணியைத் துடைக்கிருன். அச்செயலைச்

செய்து வருவதற்கிடையில் பசி உண்டானதைப்பற்றியும் தான் கரபாத்திரத்தில் பிக்ஷை ஏற்றதைப்பற்றியும் அதை அருந்தியதைப்பற்றியும் ஆகிய உணர்வுகள் அவன் உள்ளத்தை வந்து தாக்குவதில்லை. உணவு உண்டது அல்லது உண்ணுது இருந்தது எல்லாம் ஒரே நிலையாய் வாய்க்கிறது அந்தத் தீவிர தியாகிக்கு. உபரதியில் உறுதி பெற்றவனுக்கே அத்தகைய பெருநிலை அனுஷ்டானத்தில் வருகிறது. ஆனல் உபரதி பெருத சாதகனுக்கு உடலைப்பற்றிய ஞாபகம் உண்டு; பசி தாகத்தைப்பற்றிய ஞாபகம் உண்டு. ஞான சாதனத்தில் அத்தகைய உணர்வு இன்னும் கீழ்த்தரமான நிலையையொட்டியதாகும். அந்தக் கீழ்நிலையில் இருக்கிற சாதகன் தற்செயலாய்க் கிடைக்கிற உணவைக் கையால் ஏற்று உண்டு பழகினல் உடலுக்கு இன்னும் அதிக உபாதியை உண்டுபண்ணிவிடும். ஏனென்ருல் பொருந்திய உணவு, பொருந்தாத உணவு என்னும் கோட்பாடு தேகாத்ம புத்தி உடைத்திருப்பவனுக்கு முற்றிலும் அவசியமாகிறது. உடல் உணர்வு இருக்கும் வரையில் குறிப்பிட்ட வேளைகளில் தான் ஆகாரம் ஏற்றுக்கொள்ளவேண்டும். பொருந்திய தூய ஆகாரத்தையே அருந்துவது அவனுக்கு அவசியமாகிறது. கரபாத்திர பிக்ஷையென்னும் தீவிர சாதனம் அவனுக்கு ஒவ்வாது. தாயுமானவர் தமக்கு அத்தகைய தீவிர நிலை இன்னும் வரவில்லை யென்பதை ஆகையாலே கை ஏற்று உண்ணும் புசிப்பு ஒவ்வாது என்கின்ருர்.

துறவிகளுள் பரிவ்ராஜக பரமஹம்சர் என அழைக்கப்படும் ஒரு மரபினர் உளர். அவர்கள் ஒரே இடத்தில் தங்குவதில்லை. ஓடுகிற நதியும் இடையருது இடம் மாறிப்போய்க்கொண்டிருக்கும் துறவியும் தூய்மைக்கு எடுத்துக்காட்டாக

இலங்குகின்றனர் என்பது பழமொழி. அவ் ஐதிகத்துக்கு ஒப்ப விவேகானந்த சுவாமிகள் சிறிதுகாலம் பரிவ்ராஜக பரமஹம்சர் விரதம் பூண்டவராய் இந்தியா முழுதையும் சுற்றிப்பார்த்தார். அப்பொழுது அவர் கையில் காசு எதையும் தொடுவது கிடையாது. வலியத் தமக்கு வந்து வாய்த்த பிக்ஷா அன்னத்தையே புசித்துவந்தார். அப்பொழுது தாம் பெற்ற அனுபவங்களை அடிப்படையாக வைத்துக்கொண்டு இக்காலத்திய துறவியர்களுக்குரிய நெறியைச் சிறிது மாற்றியமைக்கவேண்டும் என்னும் முடிவுக்கு அவர் வந்தார். பிக்ஷா அன்னமாகக் கிடைப்பதைப் புசித்திருக்கும் துறவியர்களுக்கு இன்னல்கள் பல இருக்கின்றன. பொருந்தாத உணவு வகைகளே அவர்களுக்குப் பெரும்பாலும் வந்து வாய்க்கின்றன. குறிப்பிட்ட வேளைகளில் உணவு அகப்படாது. துறவியர்களுடைய ஆற்றல் முழுதும் வெறுமனே அவ்விரதத்தை அனுஷ்டிப்பதிலேயே விரயமாய்விடுகிறது. அதற்கு மாருக அவர்கள் தகுந்த ஸ்தாபனங்களில் இருந்து கொண்டு உயர்ந்த லட்சியங்களுக்காக உழைப்பார்களாகில் அது நல்ல கைங்கரியமாகும்; அது நல்ல ஈசுவர ஆராதனையுமாகும். அப்பெரு மக்களுடைய அறிவும் அனுபவமும் ஆற்றலும் சமுதாயத்துக்கு நன்கு பயன்படுவனவாகும். இத்தகைய முடிவுக்கு விவேகானந்தர் வந்ததின் விளைவாகவே துறவியர்களால் நடாத்தப்பெறுகிற பொது நல ஸ்தாபனங்களை அவர் நிறுவுவாராயினர். அப்படிச் செய்வது சிறந்ததொரு சாதனம் ஆகும் என்பதை அக்காலத்தில் தாயுமான சுவாமிகளும் உணர்வாராயினர். தேக உணர்வு இருக்கும் பரியந்தம் பிக்ஷையாக வாய்க்கிற உணவைக் கையில் ஏற்று உண்ணும் செயல் ஒவ்வாது என்று இயம்பிய தாயுமானவர் எந்நாளும் உன் காட்சியில் இருந்துகொண்டு வல்லாள

ராய் இயமம் நிய மாதி மேற்கொண்ட மாதவர்க்கு ஏவல் செய்து மனதின் படிக்கு எல்லாம் சித்தி பெறலாம் என்கின்ருர். அதாவது தவநெறி பிறழாதிருக்கின்ற சான்ருேர்களுக்குக் குற்றேவல் புரிவதற்கு நிகரான ஆத்ம சாதனம் வேறு எதுவும் இல்லை. அப்படித் தவநெறி பிறழாதிருக்கின்றவர்கள் சர்வகாலமும் தங்களுடைய மனதை ஈசனுடைய சாந்நித்தியத்திலேயே நாட்டி வைத்திருப்பதால் அவர்கள் ஈசனுடைய சாந்நித்தியத்தில் இருப்பவர் ஆகின்றனர். தாங்கள் கொண்டுள்ள பெரு விரதத்தினின்று அவர்கள் ஒருபொழுதும் பிறழுவதில்லை. ஆதலால் அவர்கள் வல்லாளர் ஆகின்றனர். வீடு ஒன்று கட்டுவதற்கு அஸ்திவாரம் மிக முக்கியமானது. அது பூமிக்குள்ளே புதைந்து கிடக்கிறது என்ருலும் கட்டடம் முழுதையும் தாங்குதற்கான உறுதி அதன்பால் அமைந்திருக்க வேண்டும். அதே விதத்தில் ஆத்ம சாதனம் என்னும் அருள் மாளிகை கட்ட விரும்புகிறவர்களுக்கு இயமம் நியமம் என்னும் அஷ்டாங்க யோகத்தின் முதல் இரண்டு அங்கங்கள் உறுதி பெற்றிருக்க வேண்டும். அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரம்மச்சரியம், அபரிக்ரகம் ஆகிய இவ்வைந்தும் அடங்கப்பெற்றது இயமம். இவ்வைந்தையும் முறையே கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பொறிவழி செல்லாமை, பொருள் ஏலாமை எனப் பொருள்படுத்தலாம். இனி நியமம் என்பது சந்தோஷம், சௌசம், சுவாத்யாயம், ஆர்ஜவம், ஆத்ம சமர்ப்பணம் என்னும் ஐந்து கூறுகளை உடையது. மகா தபஸ்விகள் என்போர் இந்த இயமம் நியமம் என்னும் யோகத்தின் இரு அங்கங்களை நன்கு அனுஷ்டிப்பவர்கள் ஆகிருர்கள். அத்தகையவர்களுக்குப் பணிவிடை செய்து கொண்டிருக்கிறவர்களுக்கும் இந்தப் பேரியல்புகளெல்லாம்

சிரமமின்றி வந்து வாய்க்கின்றன. கொண்டுள்ள லட்சியத்தில் மனது உறுதி பெற்றிருப்பதே ஆன்றோர்களால் அங்கீகரிக்கப்படுகிற பரமசித்தி ஆகிறது. அப்படியல்லாது நீர் மேல் நடத்தல் போன்ற அஷ்டசித்திகள் கழைக்கூத்தர்களுடைய விளையாட்டுக்கு நிகராக ஆத்ம சாதகனை சிறுநெறியிலே இழுத்துச் செல்லுபவைகள் ஆய்விடுகின்றன. பரநாட்டம் ஒன்றிலேயே கண்ணுங்கருத்துமாயிருக்கின்ற சாதகனே நல்ல முறையில் சித்தியை அடையப்பெற்றவனாகிறான்.

சாதனங்கள் அனைத்தும் சாதகனை ஞானத்தின் கண் எடுத்துச் செல்லுபவைகளாய் இருக்கவேண்டும். அவை யாவும் ஞானத்தில் பூர்த்தியாகின்றன. ஞானந்தான் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். எது பிரபஞ்சமாக நமக்குக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கிறதோ அது உண்மையில் பிரபஞ்சம் அல்ல; பரம்பொருள் இங்ஙனம் தோன்றிக் கொண்டிருக்கிறது. தோன்றுவது யதார்த்தக் காட்சியல்ல; தனது நிஜசொரூபமே யதார்த்தக் காட்சியாகிறது. கயிறானது அக்ஞான இருளில் பாம்பு போன்று தென்படுகிறது; பாம்புபோன்று தென்படுகிற வேளையிலும் அது உண்மையில் கயிறு. அதேவிதத்தில் பிரபஞ்சமாகத் தென்பட்டுக் கொண்டிருக்கிற வேளையிலும் உண்மையில் இருப்பது பரம்பொருள். அப் பரம்பொருளின் காட்சியைப் பெறுவதே ஞானமாகும். இக்கோட்பாட்டை ஞானம் வாய்க்கும் என்கிறார் தாயுமானவர். மனம் பக்குவமாய்விட்டால் ஞானம் தானாக வாய்க்கிறது. பரம்பொருள் ஒருவர்தான் பிரபஞ்சமாகத் தோன்றிக்கொண்டிருக்கிறார் என்னும் உண்மையை சுவானுபூதியில் அறிந்துகொள்ளுகிறவனுக்கு வாழ்க்கைப் பிரச்னைகள் அனைத்தும் அகன்று போய்விடுகின்றன. பிறவிப்பெருங்கடலை அவன் தாண்டியவன்

ஆகிருன்; முக்தியென்னும் பெரிய பேறு அதனை அவன் அடையப்பெற்றவன் ஆகிருன்.

தாயுமானவர் ஆத்மசாதன சம்பந்தமான மற்ருெரு கோட்பாட்டை ஈண்டு ஒருமனு எனக்கு இங்கு இல்லாமை ஒன்றினையும் இல்லாமையாக்கவே இப்போது இரங்கு கண்டாய் என இறைவனிடம் தெரிவிக்கின்ருர். உடைமையும் வறுமையும் மனநிலையைப் பொறுத்தவைகளாம். நல்ல மனமுடையவனுக்கு எல்லாம் உண்டு. மனபரிபாகம் அடையாதவனுக்கு வாய்ப்புகள் எத்தனையிருந்தாலும் இல்லாமை என்னும் உணர்ச்சி உள்ளத்தில் உதித்துக் கொண்டேயிருக்கிறது. இறைவா, உன்னிடம் நான் விண்ணப்பம் ஒன்று சமர்ப்பிக்கின்றேன். அந்த விண்ணப்பத்தை நீ அங்கீகரித்து அருள்வாயாக. உன்னுடைய சாந்நித்தியத்தில் எனக்கு எல்லாம் வாய்க்குமாதலால் எனக்கு ஒன்றும் இல்லையே என்று உணருகிற அல்ப உணர்வு என் உள்ளத்தினின்று அகன்று விடுவதாகுக. அந்தச் சிற்றியல்பு உள்ளத்தினின்று நீங்கி விடுமாகில் ஞானம் ஈருக தெய்வ சம்பத்து அனைத்தும் ஆத்மசாதகனுக்குத் தாமாக வாய்த்து விடுகின்றன. இக் கருத்துக்கள் அனைத்தும் அடங்கிய பாடலாகும் இது.

---

## எங்கும் நிறைகின்ற பொருள் - 9

மரவுரி யுடுத்துமலை வனநெற் கொறித்துமுதிர்
வனசருகு வாயில்வந்தால்
வன்பசி தவிர்த்தும்அனல் வெயிலாதி மழையால்
வருந்தியும் மூலஅனலைச்
சிரமள வெழுப்பியும் நீரினிடை மூழ்கியும்
தேகநம தல்லவென்று
சிற்சுக அபேக்ஷையாய் நின்னன்பர் யோகஞ்
செலுத்தினர் யாம்பாவியேம்
விரவும்அறு சுவையினெடு வேண்டுவ புசித்தரையில்
வேண்டுவ எலாமுடுத்து
மேடைமா ளிகையாதி வீட்டினிடை வைகியே
வேருெரு வருத்தமின்றி
இரவுபக லேழையர்கள் சையோக மாயினேம்
எப்படிப் பிழைப்பதுரையாய்
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

*மக்கள் புரிகின்ற ஆத்ம சாதனங்கள் காலநிலைக்கும் உடல் நிலைக்கும் ஏற்றபடி மாறியமைவதுண்டு. காலமானது நான்கு யுகங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் முறையே கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலி யுகம் எனப்படுகின்றன. இந்நான்கினுள் மானுட வாழ்க்கைக்கு அனுகூலங்களும் பிரதிகூலங்களும் சேர்ந்தே அமைந்திருக்கின்றன. கிருதயுகத்தில் மனிதனுக்கு ஆயுள் அதிகம். பிராண சக்தியை அவன் ஏராளமாகப் பெற்றிருப்பவன் ஆகிருன். மனதில் எண்ணுகிற எண்ணத்துக்கு ஒப்ப*

அவனுக்குப் பிராணசக்தி உண்டாகிறது. மற்ற யுகங்களுக்குக் கீழிறங்கிவருவதற்கேற்ப மனிதன் படைத்துள்ள பிராண சக்தியும் கீழ்மையடைகிறது. இதையெல்லாம் தெளிவுறுத்திச் சொல்லுமிடத்து மனிதனுக்கு உயிரானது கிருதயுகத்தில் அவனுடைய மனதில் இருக்கிறது. திரேதாயுகத்தில் அவ்வுயிர் வாழ்வு உடலினுள்ளே எலும்புக்குள்ளிருக்கும் மஜ்ஜையில் தங்கியிருக்கிறது. துவாபரயுகத்தில் அது ரத்தத்துக்கு வருகிறது. கலியுகத்திலோ மனிதனுடைய உயிர் அன்னத்தைச் சார்ந்திருக்கிறது. முறையாக உணவை ஏற்காவிடில் கலியுகத்தில் வாழ்ந்திருக்கும் மனிதன் ஒருகாரியத்துக்கும் உதவமாட்டான். ஆனால் கிருதயுகத்திலே மனத்தின் உயர்வுக்குஒப்ப மனிதனது உயிர்நிலையும்உயர்வை அடையப்பெற்றிருக்கிறது. இனி, இதற்கு ஈடாக மற்றொரு முறைமை மானுட வாழ்க்கையில் அமைந்திருக்கிறது. முக்தியைப் பெறுவது கிருதயுகத்தில் மிகமிகக் கடினமானது. மற்ற யுகங்களுக்குக் கீழேயிறங்கி வரவர முக்தியைப் பெறுவது எளிதாகிறது. நான்கு யுகங்களுள் கலியுகம் ஒன்றே முக்தியைப் பெறுதற்கு மிகவும் அனுகூலமானது. இப்படி ஒவ்வொரு யுகத்திலும் தராதரங்கள் மாறியமைந்திருக்கின்றன.

கிருதயுக வாசிகள் புரிந்து வந்த தபசும் ஆத்மசாதனங்களும் எவ்வளவு கடினமானவைகள் என்பதையும் இக்கலிகாலத்தில் தாம் புரிந்து வருகிற ஆத்மசாதனம் எவ்வளவு கீழ்த்தரமானது என்பதையும் மிகத் தெளிவுபடத் தாயுமானவர் சீர்தூக்கிக்காட்டுகிறார்.

கிருதயுகத்தில் வசித்து வந்த தவசிகளுக்கு தேகாத்ம புத்தி மிகக் குறைவு. உடலைத் தான் என்று எண்ணுகிற உணர்வு தேகாத்ம புத்தி எனப்படுகிறது. தேகாத்ம புத்தி

யைத் தாண்டியிருக்குமளவு மனிதன் மேலோன் ஆகிருன். அவ்வுணர்வினுள் ஊறியிருக்குமளவு மனிதன் கீழ்மையுறு கிருன். இக்காலத்திய மனிதனுக்கு மிருதுவான பட்டாடை யும் பருத்தி நூலில் நெய்துள்ள ஆடையும் தேவையா யிருக்கின்றன. ஆனல் உடல் கூற்றை முற்றிலும் வென் றுள்ள தவசிகளோ வனத்தில் அகப்பட்ட மரப்பட்டையை எடுத்து உடையாக அரையில் சுற்றிக் கட்டியிருந்தனர். துணி துவைப்பது போன்று தினந்தோறும் அப்பட்டையினை நீரில் நனைத்துத் துவைக்க முடியாது. நெடுநாளைக்கு ஒரு தடவை நனைத்து வைப்பதற்கு மட்டும் அது உதவியது. அதை அணிதலிலேயே சிரமம் மிகவுண்டு. ஸ்ரீ ராமனும் லட்சுமணனும் வனவாசம் செய்தபொழுது அத்தகைய தவக் கோலத்தில் இருந்தனர். அப்படி உடல் சுகத்தை ஒதுக்கி வைத்தவர்களை மரவுரி உடுத்து எனத் தாயுமானவர் மொழி கிருர். மரத்தினின்று கிடைக்கின்ற மர நார்ச்சீலையை அணிந்து என அது பொருள்படுகிறது.

உடல் உணர்வை வென்றவர்களுக்கு உணவைப்பற்றிய விசாரம் உண்டாவதில்லை. பல நாட்களுக்கு ஒரு தடவை இயற்கையாக அகப்படும் எளிய உணவு கடுந்தவசிகளுக் குப் போதுமானதா யிருந்தது. மலையிலே ஒருவித நெல் தாளுக விளைவதுண்டு. வனங்களிலும் அதே விதத்தில் மற்றொருவித நெல் மக்களால் சாகுபடி செய்யப்படாது தாளுக விளைந்து வந்தது. தவசிகள் அத்தகைய நெல்மணி கள் சிலவற்றைச் சேகரித்துக் கொறித்து அருந்தி வந்தனர். அவைகளில் ஒரு சிறிதளவு அருந்திஞல் அன்னவர்களுக்குப் போதுமானதாயிருந்தது. அப்படி அவர்கள் புரிந்த செயலை **மலை வன நெல் கொறித்தும்** எனத் தாயுமானவர் பகர் கின்ருர்.

வேறு சில தவசிகள் தாம் இருக்கும் இடத்தை விட்டு எழுந்திருப்பதில்லை. உணவை நாடி அவர்கள் இங்குமங்கும் அலைவதில்லை. நிஷ்டையில் உட்கார்ந்தபடியே அவர்கள் சர்வகாலமும் இருந்து வந்தனர். அத்தகையவர்களுக்கு சருகுகள் காற்றால் அடிக்கப்பட்டுத் தாமாக அருகில் வந்து சேர்ந்தால் அவைகளை எடுத்துப் புசித்துக் கொடிய பசிப் பிணியை நீக்கி வந்தனர். அதைக்குறித்து **உதிர் வன சருகு வாயில் வந்தால் வன்பசி தவிர்த்தும்** என அண்ணல் இயம்புகிறார். இப்படி உணவைப்பற்றிய கேள்வி சிறிதேனும் இல்லாது அத் தவப் பெருமக்கள் உடலைத் தாங்கியிருந்தனர்.

இனிக் கால நிலைக்கு ஒப்ப வெப்பம் மிக நிறைந்த வெயில், இளம் வெயில், பெருமழை, சாமானியமான மழை ஆகியவைகள் மாறி மாறி வந்து அமைகின்றன. பருவ வேற்றுமை அதினின்று உண்டாகிறது. பருவ மாறுதலை முன்னிட்டு வருகிற இடைஞ்சல்களை **அனல் வெயிலாதி மழையால் வருந்தியும்** எனக் கடுந்தவசிகளைக் குறித்துத் தாயுமானவர் கூறுகிறார். வேனிற்காலத்தில் சகிக்க முடியாத அனல், மழை காலத்தில் எங்கும் ஒரே நீர்மயம், குளிர் காலத்தில் பெரும் சீதம்—இத்தகைய இயற்கையின் மாறுதல்களை அத் தவசிகள் பொருள்படுத்தாது திதிக்ஷை பழகி வந்திருக்கின்றனர். மற்றவர்கள் காட்சியில் பருவ மாறுதலை முன்னிட்டுத் தவசிகள் வருந்துபவர்கள் போன்று தென்படுகின்றனர். ஆனால் தங்களது மனநிலையில் வருத்தத்துக்கு அவர்கள் சிறிதேனும் இடம் கொடுப்பதில்லை. பருவநிலையை அனுகூலமானவைகள் என்றும் பிரதிகூலமானவைகள் என்றும் உடல் பற்றுடையவர்கள் பொருள்படுத்துகின்றனர். உடல்பற்றை மீறியிருக்கின்றவர்களுக்கு சீதத்தையும் உஷ்

ணத்தையும் முன்னிட்டு உண்மையில் ஒருபொழுதும் வருத்த மில்லை. அப்பெருமக்கள் வருத்தப்பட்டுத் தவம் புரிந்தனர் எனப் பொருள்படுத்துவது உலக வழக்கு ஆகும்.

மானிட சரீரத்தில் யோக சாதனத்துக்குரிய ஆறு ஆதா ரங்கள் இருக்கின்றன. அவைகளுள் உடலின் அடிப்பாகத் தில் இருப்பது மூலாதாரம். அங்குக் குண்டலினி சக்தி மறைந்து கிடக்கிறது. அச்சக்தியை யோக சாதனத்தால் மேலெழுப்புங்கால் கதகதப்புடையதாக அது வியாபக மாகிறது. உச்சந்தலைவரையில் அக்குண்டலினி சக்தி மேலெழும்படி செய்துவிட்டால் உடலுக்குத் தேவையாயிருக் கிற கதகதப்பும் உயிர் வாழ்க்கைக்கு இன்றியமையாத பிராண சக்தியும் அதனிடத்திருந்து வருகிறது. அப்பொழுது புறவுலகினின்று உணவையும் பிராணனையும் பெறவேண்டிய அவசியம் இல்லாது போய்விடுகிறது. பருவத்தில் வருகிற மாறுதல்களும் அவ்வுடலுக்கு எந்தவிதமான தீங்கையும் செய்யமாட்டா. அப்படி உடலினுள்ளே இருக்கும் பெரிய வாய்ப்பைக் குறித்து மூல அனலைச் சிரமளவு எழுப்பியும் எனத் தாயுமானவர் பகருகிறார்.

தாங்கள் உடல் உணர்வை வென்றிருக்கிறார்களா அல்லது வெல்லவில்லையா என்பதைத் தங்களுக்குத் தாங் களே அறிந்துகொள்ளுதல் பொருட்டு சிலதவசிகள் கோடை வெப்பம் நிறைந்திருக்கிறபொழுது நான்கு பக்கமும் தீ மூட்டி அவைகளின் நடுவே அமர்ந்துகொண்டு நிஷ்டை புரிவார்கள். தலைக்குமேல் சூரியன் வெப்பத்தைச் சொரிந்து கொண்டிருப் பதால் அச் சூரியனும் அக்னிக்கு நிகராகக் கருதப்படுகிறான். ஆக, இந்த ஐந்தையும் சேர்த்து பஞ்சாக்னி தபசு எனப் பகர்வதுண்டு. அனலைத் தாயுமானவர் குறிக்கிற பொழுது அது பஞ்சாக்னித் தபசையும் குறித்துக்காட்டுவதாகிறது.

கோடையிலே பஞ்சாக்னித் தபசு புரிகிறவர்கள், குளிர் காலத்திலே தணுப்பு மிக நிறைந்திருக்கும் நீரினுள் கழுத் தளவு ஆழத்தில் நின்றுகொண்டு நிஷ்டை புரிவார்கள். அப்படி அவர்கள் செய்கிற செயலை **நீரினிடை மூழ்கியும்** எனத் தாயுமானவர் கூறுகிறார். வெப்பத்தைக் கடும் வெப்ப மாக மாற்றுவதாலும், தணுப்பைக் கடுந்தணுப்பாக மாற்று வதாலும், அத்தகைய வெப்பத்துக்கும் தணுப்புக்கும் தங்கள் தேகத்தை உட்படுத்துவதாலும் அத் தவசிகள் தேகாத்ம புத்தியைக் கடக்கப் பயின்று வந்தனர். தேகம் ஒருபொழுதும் தங்களுக்குச் சொந்தமல்ல என்பதை **தேகம் நமதல்ல என்று** தாயுமானவர் குறித்துக் காட்டுகிறார்.

இத்தனைவிதச் செயல்களின் மூலம் அக் கடும் தவசிகள் பஞ்சேந்திரியங்கள் மூலமாக நுகரப்படுகின்ற இன்பங்களை யெல்லாம் ஒதுக்கி விட்டனர். இந்த விஷயங்களுக்கெல் லாம் அப்பாலிருக்கின்ற பரமனது பேர் அருளையும் பேரின் பத்தையுமே அப்பெரு மக்கள் நாடியிருந்தனர். அப்படி அவர்கள் செய்த செயலே சீரிய யோக சாதனமாகிறது. இக்கருத்தை சிற்சுக அபேட்சையாய் **நின்அன்பர் யோகம் செலுத்தினர்** எனத் தாயுமானவர் சொல்லுகிறார்.

இதற்கெல்லாம் நேர்மாருக தம்முடைய வாழ்வு என்ன போக்கில் போய்க்கொண்டிருக்கிறது என்பதை இப் பொழுது அவர் படம் பிடித்துக் காட்டுகிறார். **யாம் பாவி யேம் விரவும் அறுசுவையினெடு வேண்டுவ புசித்து** என் பது தம்மீது அவர் சாட்டும் முதல் குற்றம் ஆகும். உடலின் மீது அபிமானம் மிக வைத்திருப்பதனல் ஒன்ருேடு ஒன்று கலந்துள்ள ஆறுவிதமான சுவைகளையுடைய பலப்பல உணவு வகைகளை வேண்டிய அளவு உண்பது தம் போக்கு என்பது இதன் கருத்து. விரவுதல் என்னும் சொல் கலத்தல் எனப்

பொருள்படுகிறது. தித்திப்புக்கு மாருகக் காரத்தையும், காரத்துக்கு மாருகத் துவர்ப்பையும், துவர்ப்புக்கு மாருக உவர்ப்பையும், இப்படி யெல்லாம் மாறி மாறி உண்பது போகத்தில் ஈடுபட்டிருப்பவர்களுடைய போக்காம்.

இனி, அடுத்தபடியாக **அரையில் வேண்டுவ எல்லாம் உடுத்து** எனத் தம்மீது தாயுமானவர் இரண்டாவது குற்றத்தைச் சாட்டுகிருர். அங்கு வனத்தில் தவம் புரிந்தவர்கள் மரவுரியைக் கொண்டு திருப்தியடைந்திருந்தனர். இங்கு மக்களால் செய்து ஆயத்தப்படுத்தப்பட்ட சொகுசு நிறைந்த நல்லவுடைகளை அணிந்திருப்பது நமது கீழான போக்கு என்பது அதன் கருத்து.

இனி, **மேடை மாளிகையாதி வீட்டினிடை வைகியே வேருெரு வருத்தமின்றி** என மூன்ருவது குற்றத்தை அவர் தம்மீது சாட்டுகிருர். வனத்திலே வெயிலையும் மழையையும் குளிரையும் பொருள்படுத்தாது அப்பெருமக்கள் வாழ்ந்திருந்தனர். இங்கு நாம் நல்ல வீட்டினுள் சொகுசுடன் வாழ்ந்திருந்து வெயில் மழை குளிர் முதலிய பருவமாறுதல்களுக்கெல்லாம் ஆளாகாது உடல் வாழ்வில் இன்புற்றிருப்பது நமது போக்கு என்பது இதன் கருத்து.

**இரவு பகல் ஏழையர்கள் சையோகமாயினேம்.** இது அவர் தம்மீது சாட்டும் நான்காவது குற்றமாகும். ஏழையர்கள் என்னும் சொல் மாதரைக் குறிப்பது போன்று இந்திரியங்களையும் குறிக்கிறது. இந்திரியங்களைக் குறிப்பதுதான் இவ்விடத்துக்குப் பொருத்தமானது. இந்திரியங்களுக்கு வசப்பட்டு இருப்பது நல்ல விவேகியர்களுடைய போக்காகவும் இருந்து வருகிறது. இந்திரியங்களை அறவே புறக்கணிப்பது பெரும்பாலார்க்கு முற்றிலும் சாத்தியமல்ல.

போகத்தைப் புறக்கணித்து விட்டாலும் இந்திரியங்களின் வசப்பட்டு வாழ்வதே பல ஆத்மசாதகர்களுடைய போக்காக இருந்து வருகிறது. இந்திரியங்களேயும் அடியோடு வென்ருெலொழிய ஆத்மசாதகன் பாரமார்த்திகத்துக்கு உரியவன் ஆகமாட்டான். தவசிகளோடு சீர்தூக்குமிடத்து இந்திரியங்களுக்கு வசப்பட்டிருக்கிறவர்கள் யோகியர் அல்லர்; போகிகள் ஆகின்றனர். அத்தகைய இரண்டாம்தர நிலேயையே தாயுமானவர் ஈண்டு குறிப்பிட்டுக் காட்டுகிருர்.

தீவிரமான வாழ்க்கை ஒருபுறமிருக்க இந்த இரண்டாம் தரமான வாழ்க்கை வாழ்ந்துவருகிற தாம் எப்படிப் பிழைப்பது உரையாய்? என முறையிடுகின்ருர் தாயுமானவர். வாழ்கின்ற நெறியான வாழ்வுக்கேற்ற மேலாம் பயன் நிச்சயமாகப் பெரும்தவசிகளுக்கு வாய்க்கிறது. தவ வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பவர்போன்று பாவித்துக்கொண்டு அதினின்று பலபடி கீழேயிறங்கிய நிலேயில் வாழ்ந்துவரும் நமக்கு உய்வு எங்கே என்பது கோட்பாடு. இக்கருத்துக்கள் யாவும் அடங்கிய பாடல் இதுவாம்.

---

# எங்கும் நிறைகின்ற பொருள் - 10

உன்னிலையும் என்னிலையும் ஒருநிலை யெனக்கிடந்
துளறிடும் அவத்தையாகி
உருவுதான் காட்டாத ஆணவமும் ஒளிகண்
டொளிக்கின்ற இருளென்னவே
தன்னிலைமை காட்டா தொருங்க இருவினையினுல்
தாவுசுக துக்கவேலை
தட்டழிய முற்றுமில் லாமாயை யதனுல்
தடித்தகில பேதமான
முன்னிலை யொழிந்திட அகண்டிதா காரமாய்
மூதறிவு மேலுதிப்ப
முன்பினெடு கீழ்மேல் நடுப்பக்கம் என்னுமல்
முற்றுமா னந்தநிறைவே
என்னிலைமை யாய்நிற்க இயல்புகூ ரருள்வடிவம்
எந்நாளும் வாழிவாழி
இகபர மிரண்டினிலும் உயிரினுக் குயிராகி
எங்குநிறை கின்றபொருளே.

*'அஹம் பிரம்மாஸ்மி'* என்பது வேதங்களில் அமைந்துள்ள நான்கு மகாவாக்கியங்களுள் ஒன்று. நான் பிரம்மம் என இம் மகாவாக்கியம் பொருள்படுகிறது. ஆனுல் இதன் உட்கருத்தை உலகத்தவர் உள்ளபடி அறிந்துகொள்வதில்லை. இந்த வாக்கியத்தின் மீது நம்பிக்கை வைக்கிறவர்களில் பலர் இதைச் சரியாக அறிந்துகொள்வதில்லை. மற்று இதற்குத் தடை சொல்லுகிறவர்கள் அனைவரும் இதைச் சரியாக அறிந்துகொள்வதில்லை. முற்றிலும் பரிபக்குவம் அடைந்துள்ள ஆத்ம சாதகன் ஒருவனுக்கு, பிரம்மத்தை

சாக்ஷாத்கரித்துத் தாமே பிரம்ம சொரூபமாயிருக்கிற நிறை ஞானி ஒருவர் இந்த மகாவாக்கியத்தை உபதேசிக்கிறார். நன்றாக முதிர்ந்து கனிதற்கிருக்கிற காய் ஒன்றைக் கனிந்த கனியுடன் சேர்த்து வைத்தால் விரைவில் அம் முதிர்ந்த காயும் பழுத்துக் கனியாய் விடுகிறது. அப்படிக் கனியாக மாறியமையும் தன்மை பிஞ்சுக்கு இல்லை. ஆத்ம பரிபாகத் தில் உலக மக்கள் எல்லோரும் பிஞ்சு போன்றும் பூப்போன் றும் இருக்கின்றனர். கனிந்து கனியாகும் பரிபாகம் இன் னும் அவர்களுக்கு வரவில்லை. ஆதலால் அத்தகையவர்கள் இந்த மகாவாக்கியத்தைப் பற்றி அபிப்பிராயம் சொல் லவோ அல்லது இதை அனுஷ்டிக்கவோ சிறிதேனும் அரு கதையற்றவர்களாம். எத்தகைய தீவிர ஆத்ம சாதகர்கள் இதை ஓர்ந்து உள்ளபடி அறிந்திருக்கிறார்கள் என்பதை ஆராய்ந்து பார்ப்போம்.

உயிர்கள் அனைத்தையும் ஜீவாத்மாக்கள் என்கிறோம். அவ்வுயிர்களுள் மிக உயர்நிலைக்கு வந்திருப்பவன் மானுடன். ஞான நிலையை யெட்டும் பரிபாகம் மானுடனுக்கு உண்டு. இவ்வுலகில் தென்படுகிற மற்ற உயிர்களுக்கு அத்தகைய பரிபாகம் இல்லை. மானுட நிலையை யெட்டிய பிறகே அவை களுக்கு அப் பரிபாகம் வருகிறது. இனி மக்களுள் எல் லோருமே ஞானத்துக்குத் தகுதி வாய்ந்தவர்கள் அல்லர். ஒருகோடி மக்களுள் ஏதேனும் ஒருவன் ஞானத்துக்குப் பக்குவம் அடைந்திருப்பானாகில் அது பாராட்டுதற்குரிய பெரிய பேறு ஆகும். மனிதனுடைய பக்குவம் எல்லாம் மனநிலையில் இருக்கிறது. மனம் பண்பட்டுக்கொண்டு வருவதற்கேற்ப மனிதன் மேன்மையுறுகிறான். முழுதும் பண்பட்ட மனதில் தெய்விகம் நன்கு ஒளிர்கிறது. ஆயினும் அப் பண்பட்ட மனது நித்தியவஸ்து ஆகாது. மாறுபடும்

தன்மை அதனிடத்து உண்டு. பாராட்டுதற்குரிய உயர் நிலையை எய்திய மனது பிறகு பழிப்பதற்குரிய கீழ் நிலையில் வீழ்வதும் உண்டு. மனதை அந்தக்கரணம் என்று இயம்பு கிறோம். அந்தக்கரணத்தின் செயலுக்கு ஏற்ப அது நான்கு விதப் பெயர்களைப் பெறுகிறது. மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்னும் நான்கு கூறுகள் அதற்கு உண்டு. மனதை உடையவன் மனிதன். ஆனால் இம்மனதை அழித்து சம்ஹாரம் செய்தவன் பரம்பொருள். அஹம் பிரம்மாஸ்மி என்னும் மகாவாக்கியம் நாம் காலமெல்லாம் மனதோடு கூடியிருந்து மானுடனாயிருப்பது வாழ்க்கையின் குறிக்கோள் அல்ல என்பதை நமக்கு ஞாபக மூட்டுகிறது. மனதை சம்ஹாரம் செய்துவிட்டு எனது நிஜசொரூபத்தில் திளைத் திருப்பதே எனது குறிக்கோள் என இந்த மகாவாக்கி யத்தை ஆத்மசாதகன் பொருள்படுத்தவேண்டும். மனிதன் படைத்துள்ள மனது அல்லது அந்தக்கரணம் மிக சூட்சும மானது. அணுப்போன்று அது மிக நுண்ணியது. நிலையற்ற மனதைத் தன் நிஜசொரூபம் என்று ஆத்மசாதகன் எண்ணி ஏமாற்றமடையலாகாது. மனிதனை ஆணவம் படைத்தவன் என்று இயம்புகிறோம். அணுமயமாயிருக்கிற மனதைத் தனக்குச் சொந்தமாக்கிக்கொண்டிருக்கிறவன் ஆணவம் பிடித்தவன் ஆகிறான். ஆணவத்தை அகற்றுவதும், அகங் காரத்தை அகற்றுவதும், மனதை அகற்றுவதும் உண்மை யில் ஒரே அருள்செயலாம். மனதின்மீது அபிமானம் கொண்டிருக்கிற மனிதன் சாதனத்தில் எவ்வளவோ மேல் நிலைக்கு வந்தான பிறகும் மயக்கம் கொள்ள இடமுண்டு. நன்றாகப் பண்பட்ட மனதை முகம் பார்க்கும் கண்ணாடி ஒன்றுடன் ஒப்பிடலாம். அக் கண்ணாடியில் சிறப்பு ஒன்று இருக்கிறது. எட்ட இருக்கும் சூரியனோடு இக்கண்ணாடியை

சீர்தூக்கினல் இது அணுவுக்கு நிகரானது. ஆயினும் இக் கண்ணுடியினுள் சூரியன் நன்கு பிரதி பிம்பிக்கும்படி செய்ய லாம். கண்ணுடியிலே பிரதி பிம்பிக்கின்ற சூரியன் மூல சூரியனுக்கு நிகராகப் பிரகாசிக்கிறது. மூல சூரியனைப் பார்த்துக் கண் கூசுவது போன்று கண்ணுடியில் பிரதி பிம்பிக்கிற சூரியனைப் பார்த்தும் கண் கூசுகிறது. இக் காரணத்தை முன்னிட்டு கண்ணுடியினுள் பிரதிபலிக்கிற சூரியன் மூல சூரியனைப் பார்த்து உன்னுடைய நிலையும் என்னுடைய நிலையும் ஒரு நிலையே என இயம்புமாகில் அக் கூற்று முற்றிலும் பொருளற்றது. சூரியனுடைய அம்சமாக இருக்கிற பெரு நெருப்பினுள் இக்கண்ணுடியைப் போட் டால் சிறிது நேரத்திற்குள் அது தனது வியக்தியை இழந்து நெருப்பில் உருகிப் போய்விடும். பிறகு சூரியனைத் தன்ன கத்து விளக்கிக்காட்டும் தகைமை அதற்கில்லை. இக்கண்ணு டிக்கு நிகர் மனிதன் படைத்துள்ள தூய மனது. அழுக்குப் படிந்த மனதிலும் அதற்கு ஆதாரமாயிருக்கிற பரமாத்மனது பிரகாசம் ஓரளவு ஒளிர்கிறது. மனது சுத்தியடைந்து வர வர பரமாத்மனது பிரகாசம் அத்தெள்ளிய மனதிலே நன்கு ஒளிர்கிறது. ஆனல் அம்மனதின் தன்மை எத்தகையது என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். அதற்கு இரண்டு உபமானங்களை எடுத்துக்கொள்வோம். சூரியனது சாந்நித்தியம் இல்லாத அதிகாலையில் பனி ஒரு புல்லின்மீது படிந்து ஒரு துளி ஆகிறது. சூரியன் உதயமான பிறகு மற்ருெரு சிறு சூரியனைத் தன்னிடத்தில் காட்டும் தகைமை அந்தப் பனித்துளிக்கு வருகிறது. பனித்துளி தென்பட்டுக் கொண்டிருக்கிற பொழுது தன்னிடத்தில் ஒளிர்கிற சூரிய பிம்பத்தை முன்னிட்டு சூரியனைப் பார்த்து அது உன்னு டைய நிலையும் என்னுடைய நிலையும் ஒன்று என்று கூறுவ

தில் பொருள் இல்லை. ஏனென்றால் சூரிய வெப்பம் ஏற ஏற பனித்துளி மறைந்துபோம். அதைத் தொடர்ந்து அதனுள் ஒளிர்கிற சூரியனும் மறைந்துபோம். இனி ஆண வம் என்னும் மனிதனுடைய அந்தக்கரணமும் தனக்கென உருவம் ஒன்றும் படையாதிருக்கிறது. அந்த ஆணவத் தையே இருள் என்று பகர்வதும் பொருந்தும். சூரியோதயத் தில் இருள் இருக்குமிடம் தெரியாது மறைவது போன்று நிறை ஞானோதயத்தில் அணுமயமான அந்தக்கரணமும் அடி பட்டுப் போகிறது. அத்தகைய நிலையற்ற அந்தக்கரணத் தில் பிரதிபிம்பிக்கிற ஆத்ம சொரூபம் சித் ஆபாசம் எனப் படுகிறது. ஆத்ம ஜோதியின் பிரதி பிம்பம் என அது பொருள்படுகிறது. பிரதிபிம்பம் ஒருபொழுதும் மூலப் பிரகாசத்துக்கு நிகர் ஆகாது. மனதற்ற நிலையில் சித் ஆபாசமும் அடிபட்டுப் போகிறது. நிலைத்த சித் சொரூப மாகிய பர வஸ்து ஒன்றே எஞ்சி நிற்கிறது. மனோநாசம் செய்துவிட்டு அப்பர வஸ்துவில் ஒன்றுவது ஞான சாதகனு டைய குறிக்கோள். மனோ விருத்தியுடன் கூடியிருக்கிற பொழுது அஹம் பிரம்மாஸ்மி என்னும் பெருநிலைக்கு ஆத்ம சாதகன் தகுதி வாய்ந்தவன் அல்லன். மனதை அபிமானித்து அதனுடன் கூடியிருக்கிறபொழுது அஹம் பிரம்மாஸ்மி என்று சொல்ல ஆத்மசாதகனுக்கு உரிமையில்லை. பின்பு பக்குவம் அடையாதவனுக்கும் அந்த மகாவாக்கியத்துக்கும் வெகுதூரம். இதையெல்லாம் குறித்துப் பாடம் புகட்டுகிற முறையில் தாயுமான சுவாமிகள் **உன் நிலையும் என் நிலையும் ஒருநிலை எனக் கிடந்து உளறிடும் அவஸ்தையாகி, உருவு தான் காட்டாத ஆணவமும் ஒளிகண்டு ஒளிக் கின்ற இருள் என்னவே தன்நிலைமை காட்டாது ஒருங்க** என்று பகருகிறார். ஒருங்குதல் என்னும் சொல் அடங்குதல்

எனப் பொருள்படுகிறது. மனமிறக்கக் கல்லாதவனுக்கு பரநிலை ஒருபொழுதும் இல்லை என்பது இதன் சாரம்.

ஜீவனுக்கு ஜீவபோதம் இருக்கும் வரையில் கர்மம் உண்டு. கர்மத்துக்கு மூலகாரணமாயிருப்பது அந்தக்கரணம் அல்லது மனது. மனதை முகாமையாகக் கொண்டு மனிதனிடத்து நிகழ்கிற கர்மமானது சூழ்நிலைக்கு ஒப்ப ஒரு வேளையில் சுகத்தைத் தருவதாகவும் மற்றொரு வேளையில் துக்கத்தை தருவதாகவும் இருக்கிறது. அது சுகத்தைத் தரும்பொழுது நல்வினை எனப்படுகிறது; துக்கத்தைத் தரும் பொழுது தீவினை எனப்படுகிறது. மனிதன் உணவு உண்கிறான். பொதுவாக அது நல்வினை எனப்படுகிறது. ஆனால் மனிதனுக்கு வயிற்றுவலி இருக்கிற பொழுது அவன் உணவு உண்டால் அந்த வயிற்றுவலி அதிகரிக்கும். ஆதலால் அத்தகைய நெருக்கடியில் அவன் உணவு உண்பது தீவினையாகும். இங்ஙனம் மனிதன் அறிந்தும் அறியாமலும் நிகழ்த்தி வருகிற வினைகள் சுகத்தையும் துக்கத்தையும் மாறி மாறி விளைவித்து வருகின்றன. மனிதன் அனுபவித்து வருகிற இன்ப துன்பங்களுக்கு முடிவில்லை. ஆதலால் அப்படி அவன் அனுபவித்து வருவதை ஒரு கடலோடு ஒப்பிடலாம். கடலுக்கு வேலை என்பது மற்றொரு பெயர். பரந்த அந்த வேலையிலே அலைகள் ஓயாது கிளம்பிக் கொண்டிருக்கின்றன. அலைகளில் அகப்பட்டுக் கொள்ளும் கட்டை ஒன்று மேலே கிளம்புவதும் கீழே ஆழ்த்தப்படுவதும் ஆகிய செயல்களில் அலையிலே அலைக்கழிக்கப்படுகிறது. மனிதனும் இன்ப துன்பம் என்னும் அலைகளிலே அலைக்கழிக்கப் படுகிறான். காற்றடிப்பதால் அலை தாவுகிறது. மனிதனுடைய மனதில் மனோ சங்கல்பம் என்னும் காற்றடிப்பதால் இரு வினைகள் என்னும் அலைகள்

அவன் உள்ளத்தில் உதித்துக் கொண்டிருக்கின்றன. ஆணவமாகவும் அகங்காரமாகவும் இன்னும் வெவ்வேறு விதங்களிலும் வடிவெடுத்திருக்கிற மனது ஒடுங்குமிடத்து வினைகள் இல்லை. வினையற்றவிடத்து இன்பதுன்ப மயமாயிருக்கிற விரிகடல் இல்லை. மனதற்ற இடத்தில் வினையுமில்லை என்பதை அறிந்து கொள்ளுதற்கு நமக்கு சமாதிநிலை வாய்க்க வேண்டிய அவசியமில்லை. ஒருவாறு சமாதி நிலையோடு ஒத்திருக்கிற சுஷுப்தி நிலையில் மனம் ஒடுங்கியிருக்கிறது. அப்பொழுது வினைகள் என்னும் அலைகள் தோன்ருதிருக்கின்றன. அதினின்று உண்மை யொன்று நமக்கு வெளியாகிறது. மனோநாசம் வாய்க்குமிடத்து தொன்றுதொட்டு வந்துள்ள வினைகள் யாவும் அகன்று போய்விடுகின்றன. இக்கோட்பாட்டை இருவினையினுல் தாவு சுக துக்க வேலை தட்டழிய எனத் தாயுமானவர் பகர்கிருர்.

மனோநாசம் வாய்க்குங்கால் இன்னும் என்ன நிகழ்கிறது என்பது கேள்வி. மாயைக்கு மூலகாரணமாயிருப்பது மனது. மாயை என்பது வெறும் ஜாலம் அல்ல. நமக்குக் கட்புலனுகின்ற பிரபஞ்சமே மாயையென்று மொழியப்பெறுகிறது. அது ஓயாது நிலைமாறியமைந்து கொண்டிருப்பதால் அதற்கு மாயை என்னும் பெயர் வந்தது. இந்த மாயையானது சர்வகாலமும் நிலைத்திருப்பதன்று. அதாவது பிரபஞ்சம் நித்தியவஸ்துவல்ல. பிரளய காலத்தில் அது இருக்குமிடம் தெரியாது ஒடுங்குகிறது. சிருஷ்டியில் திரும்பவும் தோற்றத்துக்கு வருகிறது. நமக்கு நாள்தோறும் நிகழ்ந்து வருகிற உறக்கம் பிரளயத்துக்கு நிகரானது. அயர்ந்த உறக்கத்தில் நமக்கு பிரபஞ்சம் இல்லை. விழித்திருக்கின்ற வேளையில் காண்போனுகிய நாம் இருக்கிறேம். காணப்படுபொருளாகிய பிரபஞ்சம் இருக்கிறது. எதெல்

லாம் நம்மால் காணப்படுகிறதோ அதற்கு முன்னிலே என்பது மற்ருெரு பெயர். நம் எதிரே காட்சியிலிருப்பதால் அதை முன்னிலே என்கிருேம். அந்தக்கரணம் அழிந்துபட்டுப் போகும்பொழுது அதற்கு இலக்காக இருக்கும் மாயா காரியங்களாகிய அகிலங்கள்யாவும் அடிபட்டுப்போகின்றன. மனோ விருத்தியில் அவைகளிடத்து எண்ணிறந்த பேதங்களேக்காண்கிருேம். மனது அழியுமிடத்து அந்த பேதங்களும் பொருளற்றவைகளாக மறைந்து பட்டுப்போகின்றன. இக்கருத்துக்களே முற்றுமில்லா மாயை அதனுல் தடித்து அகில பேதமான முன்னிலே ஒழிந்திட எனத் தாயுமானவர் இயம்புகிருர். முற்றுமில்லா மாயை என்பதற்குப் பொருள் எக்காலத்திலும் இல்லாத மாயை என்பதாம். அக்ஞான வேளேயில் அது இருக்கிறது. பரஞானம் வாய்க்குமிடத்து அது மறைந்து பட்டுப்போகிறது. எண்ணிறந்த உலகங்கள் அதினின்று வருவதால் அவைகள் அதனிடத்திருந்து தடித்து வந்துள்ளன என்று சொல்லப்படுகிறது. அது அழியுமிடத்து முன்னிலே அல்லது காணப்படுபொருள் ஒன்றுமில்லே; காண்போனுகிய ஆத்ம சைதன்யமே எஞ்சி நிற்கிறது. முற்றுமிருப்பது ஆத்ம சைதன்யம். முற்றுமில்லாது சற்றுமட்டும் இருப்பது மாயை.

மனம் அழிந்துபட்டுப்போக, அதைத் தொடர்ந்து கர்மம் அகன்றுவிட, அதைத் தொடர்ந்து அண்டங்கள் யாவும் அடிபட்டுப் போகின்றன. பிறகு எஞ்சியிருப்பது யாது என்பது கேள்வி. கடலிலே உதிக்கின்ற எண்ணிறந்த அலேகள் எல்லாம் ஒடுங்கிவிட்டால் கடலும் ஒழிந்துபட்டுப் போவதில்லே. திரையற்ற கடல் முற்றிலும் தன் மயமாய் எஞ்சியிருக்கிறது. அதே விதத்தில் ஜீவபோதமும் அதைச் சார்ந்துள்ள உபாதிகளும் அடிபட்டுப் போகுமிடத்து எஞ்சி

யிருக்கும் நிலையை அகண்டித ஆகாரமாய் மூதறிவு மேலுதிப்ப என்கிறார் அண்ணல். மூதறிவை வாலறிவு என்றும் சித்கணம் என்றும் பூரணப்பிரக்ஞை என்றும் அகண்ட சச்சிதானந்த மென்றும் இயம்புகிறோம். அந்நிலையில் மனிதன் தனக்கு அறியாமையில் வருவித்திருந்த நிலையற்ற சிற்றியல்புகளையெல்லாம் ஒழித்தவன் ஆகிறான். தனது வீடுபேறு ஆகிய, தனது நிஜ சொரூபமாகிய பூரணப் பிரக்ஞையில் அவன் திளைத்திருக்கிறான்.

அப் பெருநிலையோ சொல்லில் அடங்காதது; செயலில் அடங்காதது; இடத்தில் கட்டுப்படாதது; காலத்தில் கட்டுப்படாதது; கால தேச வர்த்தமானம் என்னும் மாயா விகாரங்களுக்கு ஆங்கு இடமில்லை. ஆங்கு இடமில்லாததால் மேல் என்றோ கீழ் என்றோ நவிலமுடியாது. ஆங்குக் காலமின்மையால் முன்பு என்றோ பின்பு என்றோ பகர்தற்கு அவகாசமில்லை. ஆங்கு நிமித்தத்துக்கு ஏதுமில்லையாதலால் எச் செயலைத் தொடர்ந்து என்ன விளைவு வருவதாயிற்று என்று விளம்பமுடியாது. இப்படிச் சொற்பதத்திலடங்காத பாரமார்த்திகப் பெருநிலையை **முன் பின்னொடு கீழ்மேல் நடுப் பக்கம் என்னாமல் முற்றும் ஆனந்த நிறைவே** என்று தாயுமானவர் கூறுகிறார். பேரானந்தமாயிருப்பதால் அது சூன்யமல்ல. பூரணகும்பம் நீர் நிறைந்திருப்பது போன்று இப் பெருநிலை ஆனந்தம் நிறைந்திருக்கிறது. ஆதலால் அது முற்றும் ஆனந்த நிறைவே என அழைக்கப்படுகிறது.

நிலத்தில் துள்ளிக்குதித்துத் திண்டாடிக் கொண்டிருக்கிற மீனைப்பிடித்து நீரினுள் விட்டால் அதற்குப் புதியதொரு ஆனந்தம் வருகிறது. ஏனென்றால் தனக்குரிய யதார்த்த நிலைக்கு அது திரும்பிப் போய்விட்டது. உயிர்கள் அனைத்தும் பல கோடி பிறவிகள் எடுத்து முயன்று

கொண்டிருந்தபொழுதெல்லாம் கிட்டத்தட்ட நிலத்திலே போடப்பட்ட மீன்போன்று அவ்வுயிர்கள் திண்டாடிக் கொண்டிருந்தன. முயற்சிகள் பல எடுத்து சிதறடைந்துள்ள சிறு சிறு ஆனந்தங்களை இங்குமங்கும் அவைகள் தாற்காலிகமாகப் பெறுவனவாயின. உலர்ந்த நிலத்தில் கஷ்டப்படுகிற மீனுக்குச் சற்று சதுப்பு நிலம் கிடைத்தால் அதில் அது ஓரளவு இன்பம் பெறுகிறது. அங்ஙனம் மேலான பிறவிகளை எட்டும்போது ஜீவனுக்குச் சற்று நிலைத்துள்ள இன்பங்கள் கிட்டுகின்றன. ஆனால் மனோ விகாரங்களாகிய அவை யாவும் மனோ நாசத்தோடு மறைந்து பட்டுப்போயின. எஞ்சியிருப்பது ஆத்மனுக்குச் சொந்தமாகிய பரபோதமாம். ஆத்மன் என்கின்ற வியக்தியும் ஆங்கு அடிபட்டுப் போகிறது. கடலை எட்டிய நீர்த் துளி தனது தனி வியக்தியை இழந்து கடலாவதுபோன்று பரபோதத்தில் ஜீவன் தனக்குச் சொந்தமான பேரானந்தப் பெருநிலையை அடையப்பெறுகிறான். இவ்வுண்மையை என்னிலைமையாய் நிற்க இயல்புகூர் அருள் வடிவம் எந்நாளும் வாழி வாழி என்று தாயுமானவர்போற்றுகிறார். தன் இயல்புக்குச் சொந்தமாகிய நீரை அடைந்த மீன் அந்த நீரை மனமாரவாழ்த்துவதுபோன்று ஜீவனுக்குச் சொந்தமாயுள்ள பாரமார்த்திகப் பெருநிலைக்கு ஈண்டு வாழ்த்துக் கூறப்பட்டிருக்கிறது. என்னிலைமையாய் நிற்க என்பதற்குப் பொருள் எனது நிஜசொரூபத்தைப் பெற என்பதாம். இயல்புகூர் என்பதற்குப் பொருள் எனக்குச் சொந்தமாயுள்ள வீடு பேற்றினை எனக்கெடுத்து அளித்த எனப்பொருள்படுகிறது. அருள் வடிவம் என்பது ஆண்டவனது பேரியல்பைச் சுட்டிக் காட்டுகிறது. ஆண்டவனது பேரியல்புதான் என்ன என்ற கேள்வி ஈண்டு எழுகிறது. பூமியினிடத்திருந்து மேலே

வீசிய கல்லை மீண்டும் தன்னிடத்துக் கவர்ந்து இழுக்கும் சக்தி பூமிக்குண்டு. இதை ஆகர்ஷண சக்தி என்கிறோம். கடலினின்று ஆவியாகக் கிளம்பி மேலே போன நீரைத் திரும்பவும் தன்னிடத்து வாங்கிக்கொள்ளும் பேரியல்பு அக் கடலுக்குண்டு. அதற்கேற்ற உபாயங்களெல்லாம் இயற்கை யில் அமைந்திருக்கின்றன. ஈசுவரனிடத்திருந்து ஜகத்தா கவும் ஜீவர்களாகவும் வெளியே கிளம்பியிருப்பது அவரு டைய மகிமை அல்லது விபூதி. இது அருள் வடிவம் என வும் இயம்பப்படுகிறது. பலப்பல பிறவிகள் வாயிலாக இறைவன் உயிர்களைத் தம்மிடம் கவர்ந்து இழுக்கிறார். அப் பிறவிகளில் வாய்க்கிற இன்ப துன்பங்கள் இறைவனிடம் உயிர்கள் விரைந்து ஓடும்படி தூண்டுகின்றன. குழந்தை யினிடமிருந்து தாயானவள் வேண்டுமென்றே சற்று மறைந் திருக்கிறாள். தன்னை நாடி அக்குழந்தை சற்று அலைந்து திரிவதில் அவள் மகிழ்வடைகிறாள். அப்படி அலையும் பொழுது குழந்தைக்குத் தாய்ப்பற்று அதிகரிக்கிறது. இறுதியில் தன் சொருபத்தைத் தாய் குழந்தைக்குக் காட் டிக்கொடுக்கிறாள். இறைவனுடைய அருள் வடிவம் அத்த கையது. இக்கருத்துக்கள் யாவற்றையும் மேற்கூறிய பாட லின்கண் தாயுமானவர் தொகுத்து அமைத்திருக்கிறார்.



# தர்ம சக்கரம்

## மாத சஞ்சிகை

### ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

**1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது**

| *ஆண்டு சந்தா* | | *தனி இதழ்* |
|---|---|---|
| உள்நாடு | ரூ. *10-00* | ரூ. *1-00* |
| வெளிநாடு | ரூ. *15-00* | ரூ. *1-50* |

ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டிபாசிட் செய்துவிட்டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்துகொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகையாகிய ரூபாய் நூறையும் திரும்பப்பெற்றுக்கொள்ளலாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
**திருப்பராய்த்துறை 639 115**
**திருச்சி ஜில்லா**